உ
சிவமயம்.

# மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்.

திருவாவடுதுறை ஆதீனத்து மஹாவித்துவான்
ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள்
இயற்றியது.



ஸ்ரீ முருகன் பதிப்பகம்
19, ஸ்ரீ கும்பேசுவரர் தெற்கு வீதி,
கும்பகோணம்.
1953.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்குடந்தை

# மங்களாம்பிகை — பிள்ளைத்தமிழ்.

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
மஹாவித்துவான், திரிசிரபுரம் —
**ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்**
இயற்றியது.

---

குடந்தை, ஸ்ரீ முருகன் பதிப்பகம் சொந்தக்காரர்
**ப. சாமிநாதபிள்ளை அவர்கள்**
விருப்பப்படி

ஷை திருவாவடுதுறையாதீன வித்துவான்,
சித்தாந்த சைவமணி —
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களால்**
பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டது.

---

உரிமை பதிவு. நந்தன—மாசி விலை ஐந்தணா.

1953

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை

---

பிள்ளைத்தமிழ் என்பது தமிழில் உள்ள தொண்ணூற்ருறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்ரும். இது பிள்ளைப்பாட்டு எனவும் வழங்கப்படும். பாட்டுடைத் தலைவரைக் குழந்தையாகப் பாவித்துச் செவிலித்தாய் முதலியோர் காப்பு முதலிய பத்துப் பருவங்களுக்கு ஏற்ற செயல்களை எடுத்துக்கூறிப் பாராட்டுவதாகப் புலவர் பெருமக்களால் பாடப்படுவது இப்பிரபந்தம். இஃது ஆசிரிய விருத்தத்தால் இயற்றப்பெறுவது. கடவுளரையேனும் ஆசிரியரையேனும் உபகாரிகளையேனும் குழந்தையாகவைத்துப் பாடுவர். தத்துவங்கடந்த பரம்பொருளாகிய சிவபெருமானைப் பிள்ளைப் பருவத்தில்வைத்துப் பிள்ளைத்தமிழ் செய்வதில்லை. விநாயகர், முருகவேள், அம்மையார், திருமால் முதலிய கடவுளர்க்குப் பிள்ளைத் தமிழ்கள் பலஉள. அருமார்மீதும் பிள்ளைத்தமிழ் உண்டு. அம்பலவாண தேசிகர்பிள்ளைத்தமிழ் ஆசிரியரைப்பற்றிப் பாடியதாகும். குலோத்துங்கசோழன்பிள்ளைத்தமிழ், சிவந்தெழுந்த பல்லவராயன்பிள்ளைத்தமிழ் முதலியன உபகாரிகளைப்பற்றிப் பாடியவை. இனி,

"மக்கண்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்ட லின்பம் செவிக்கு"

என்பது திருக்குறள். தீண்டல் உடற்கின்பமும், கேட்டல் செவிக்குஇன்பமும் விளைவித்தல்போல, குழந்தைகளின் விளையாட்டுக்காண்டலும் கண்ணுக்கின்பமாம் என்பது போதரும். பெறலரும் பிள்ளையைப் பெற்றதாய் முதலியோர் "குறுகுறு நடந்து சிறுகை நீட்டி – இட்டும் தொட்டும் கௌவியும் துழந்தும் – நெய்யுடை

அடிசில் மெய்பட விதிர்த்தும்" விளையாடுதல் முதலிய செயல் களைக்கண்டு அநுபவிக்க அவரிடைத் தோன்றும் ஒருதலையின்பமே இங்கே வைத்துக் கூறப்படுவது.

இப்பிரபந்தம், புறப்பொருள் வகையாகிய பாடாண்திணை யில் "குழவிமருங்கினும் கிளவதாகும்" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தாற் கூறப்பட்ட காமப் பகுதியின் பாற்பட்டு மக்கட் குழவிக்கு உரித்தாக வழங்கப்படும். ஆயினும், ஓரோவழித்தெய்வத் தோற்றமாகிய மக்கட் குழவியின் பருவத்தை ஆரோபித்தலால் அக்குழவியோடு ஒற்றுமையுடைய தெய்வத்துக்கும் உரியதாக இது வழங்கப்படும் என்க. தமிழ் என்பது ஈண்டு பிரபந்தம் என்னும் பொருள் பயக்கும். இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என வழங்கும் தொடரில் இப் பொருள்படுதல் காணலாம்.

இனி, இஃது ஆண்பாற்பிள்ளைத்தமிழ், பெண்பாற்பிள் ளைத்தமிழ் என இருவகைப்படும். பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைப் பாதுகாக்கவேண்டும் என்று அமைப்பது காப்புப் பருவம். திருமால் காத்தற்கடவுள் ஆதலின் இப்பருவத்தின் முதற் செய்யுளை அவரது காப்பாக அமைத்தல் தொன்றுதொட்ட மரபு. குழந்தை பிறந்த ஏழாவதநாள் காப்பிடல் என்ற வழக் கத்தையொட்டி இலக்கிய வழக்கிலே இஃது அமைந்ததுபோலும். காப்பு முதல் எழு பருவங்களும் ஒன்றாகவே அமைவன: இறுதி மூன்று பருவங்கள் ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றில், சிறு பறை, சிறுதேர் எனவும்; பெண்பாற் பிள்ளைத்தமிழில் அம் மானை, நீராடல், ஊசல் என வேறாகவும் அமையப்பெறும்.

இனி, மங்களாம்பிகைபிள்ளைத்தமிழை இயற்றியருளிய வர்கள் திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதினத்து மஹாவித்துவான் திரிசிரபுரம் ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள். இவர்கள் பரம்பரைச் சைவவேளாளர் மரபினர். தந்தையார் சிதம் பரம் பிள்ளை என்பவர். காலம் (1815—1876). தமிழ் வழங்கும்

நிலமெங்கும் உலகம் அழியுங்காறும் புகழுடம்பை நிறுத்திய மகா கவி இவர். 'பிற்காலக் கம்பர்' எனப் பெரியோர் இவரைப்போற்று வர். திருவாவடுதுறையாதீனத்திலேயே நிருவாணதீட்சை பெற் றுக்கொண்டவர். இவர் மாணவர்கள் எண்ணில்லாதவர். அவருள், ஸ்ரீ தியாகராச செட்டியாரவர்கள், ஸ்ரீ மகா மகோபாத்தியாய சாமிநாதையரவர்கள் இருவரும் இக்கும்பகோணம் அரசியலார் கல் லூரியிலிருந்து தமிழ்ப்புலமை நடத்தினர். சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் சென்னையிலிருந்து தமிழ்ப்புலமை நடத் தினர். பிள்ளையவர்கள் ஆண்பாற்பிள்ளைத்தமிழ் மூன்று, பெண்பாற் பிள்ளைத்தமிழ் ஐந்து, ஆக எட்டுப் பிள்ளைத் தமிழ் இயற்றினர். அவற்றுள் இப்பிள்ளைத்தமிழும் ஒன்று. இதனை யன்றித் திருக்குடந்தைத் திரிபந்தாதி, திருக்குடந்தைப் புராணம் ஆகிய இவைகளையும் இத்தல சம்பந்தமாக இயற்றினர்.

இப்பிள்ளைத்தமிழ், மாதளம்பேட்டையில் இருந்தவர் ஆகிய சவுளிக்கடைக் கனகசபைப் பிள்ளை என்னும் ஓர் அன்பருடைய வேண்டுகோளின்படி (கி—பி. 1866) அக்ஷய சித்திரை மாதத் தில் இந்த மகாகவியால் இயற்றப்பெற்றது: ஆனி-மீ அரங் கேற்றப்பட்டு விபவ-ஆனியில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. (கி—பி 1869). கனகசபைப் பிள்ளை சைவவேளாண் மரபினர். தந்தையார் ஆறுமுகம் பிள்ளை என்பவர். நடராசப் பிள்ளை என் பவர் இவருடைய தமையனார். தந்தையாரும், தமையனாரும் கல்வியறிவொழுக்க மிக்குச் சிறந்து விளங்கியவர்கள். கனகசபைப் பிள்ளை பூர்வபுண்ணியவசத்தால் மனம் வாக்குக் காயங்கள் ஒன்றிச் சிவபுண்ணியச் செயல்களையே ஆற்றும் இயல்புள்ளவர். சிவனடி யார்களுடைய உள்ளக் குறிப்பறிந்து இன்னமுதூட்டல் ஆகிய சிவப்பணிகளை முகமனுடன் மகிழ்ந்து செய்வதையே இயல்பாகப் பெற்றவர். புலவர் பாடும் புகழ்படைத்த வள்ளல் இவர். இவை களைச் சிறப்புப்பாயிரம் நன்கு உணர்த்தும்.

பிள்ளையவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்து இரு குரு மஹாசந்நிதானங்களின் உத்தரவு பெற்றுக்கொண்டு குரோதன

ஆண்டில் (1865) எளியேன் இப்போது தங்கியிருந்து மகாசந்நிதானத்தின் உத்தரவுப்படி தமிழ்ப்பணியாற்றிவரும் பேட்டைத் தெருவில் உள்ள திருவாவடுதறை மடத்திலே பரிவாரங்களுடன் வந்து தங்கியிருந்துகொண்டு இத்தல சம்பந்தமான நூல்களைச் செய்து தந்தார்கள். 15-வது ஸ்ரீ அம்பலவாணதேசிகர் பெரிய பட்டத்திலும், 16-வது மேலகாம் – ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் சின்னப்பட்டத்திலும் வீற்றிருந்து சித்தாந்தசைவப் பேரரசும் செந்தமிழ்ப் பரிபாலனமும் செய்துவந்த காலம் அது.

இனி, இப்பிள்ளைத்தமிழில் உள்ள காப்புப் பருவம் :—ஆன்றோர் ஆசாரம்பற்றித் திருமால், அமுதகும்பேசர், ஆதிவிநாயகர், முருகக்கடவுள், பிரமதேவர், இந்திரன், திருமகள், நாமகள், துர்க்கை, சத்தமாதர், முப்பத்துமூவர் முதலியோர் 'மங்களவல்லியைக்காக்க' எனக்கூறிப் பதினொரு செய்யுட்களால் அமைக்கப்பெற்றுளது. பாட்டுடைத் தலைவர் அம்மையார் ஆதலின் அவ்வம்மையாரைக் காப்பிற் கூறாமல் துர்க்கையைக் காப்பாகக் கூறப்பட்டது காண்க. இது மூன்றாந் திங்களிற் கூறப்படும்; இரண்டாந் திங்கள் என்பாருமுளர்.

இரண்டாவது செங்கீரைப் பருவம்—இது 'பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவம் குறித்தது' என்பர். கீர்—சொல். இதனை 'நிருத்த விசேடம்' என்பர் பெரியவாச்சான் பிள்ளை. இனி, ஒரு காலை முடக்கி, ஒரு காலை நீட்டி, இருகரங்களையும் நிலத்தில் ஊன்றி, தலை நிமிர்த்தி, முகம் அசைத்து ஆடும் பருவம் இதுவாம். இதனை, இந்நூல் செங்கீரைப் பருவம்—முதற்பாடலில் 'ஈனமகல் அனைய தாமரை பதித்து' எனவரும் பகுதி விளக்கும். திராவிட மாபாடியகர்த்தராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் செய்தருளிய அமுதாம்பிகை பிள்ளைத் தமிழிலும், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் செய்தருளிய மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலும் இவ்வாறே செங்கீரைப் பருவம் எடுத்தோதப் பட்டமை காண்க. இஃது ஐந்தாம் மாதத்திலே கூறப்படும்.

மூன்ருவது தாலப்பருவம் :—குழந்தைகளைத் துயிலச் செய்வோர் தம் நாவை அசைத்துப் பாட்டுப்பாடுதல் வழக்கம். தாலாட்டு என்பது மருவித் தால் என நின்றது. 'தாலோ தாலேலோ' என இப்பருவத்திலே உள்ள பாடல்களின் இறுதிகள் முடிக்கப்பெறும். இஃது எட்டாம் மாதத்தில் இயம்பப்படுவது.

நான்காவது சப்பாணிப்பருவம் :— சப்பாணி கொட்டும்படி குழந்தையிடம் கூறுவதாக அமைப்பது இப்பருவம். கையோடு கை சேர்த்துக் கொட்டல் இது. ஸ: பாணி—சப்பாணி என்பர். இஃது ஒன்பதாம் மாதத்திற் கூறப்படும்.

ஐந்தாவது முத்தப்பருவம் :— தாயரும் பிறரும் முத்தந்தா எனக் குழந்தையை வேண்டுவதாகக் கூறுதல் இப்பருவ மரபு. முத்தம் என்பது முத்தையும் குறிப்பது ஆகலின், பல் வகை முத்தங்களினும் நின் பவளவாய் முத்தமே சிறந்தது என இதிற் கூறப்படும். இது பதினோராம் மாதத்திற் கூறப்படுவது.

ஆருவது வாரானைப்பருவம் :— இப்பருவத்தில் தளர்நடையிட்டுவரும் குழவியை வா என அழைப்பதாகச் சிறப்பிக்கப்படும். இது பன்னிரண்டாம் மாதத்திற் கூறப்படுவதென்பர்.

ஏழாவது அம்புலிப்பருவம் :— குழந்தையுடன் விளையாட வருமாறு அம்புலியை அழைப்பதாகக் கூறப்படுவது. சாம—பேத—தான—தண்டம் ஆகிய நால்வகை உபாயங்களாலும் சந்திரனை அழைக்கப்பெறும். ஒப்பு, வேற்றுமை, நலம், தீமை என்பனவே அவ்வுபாயம். இந்த ஏழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத்தமிழுக்கும்பொது. பிள்ளைத்தமிழில் அம்புலிப்பருவம் பாடுதல் கடினம். ஆகலின், அம்புலிபுலி என்பர் பெரியோர். இது பதினெட்டாம் மாதத்திற் கூறப்படுவது. ஏனைய மூன்று பருவங்களும் முறையே இரண்டு, மூன்று, நான்காம் ஆண்டுகளிலே கூறப்படுவன.

இது பெண்பாற் பிள்ளைத்தமிழ் ஆதலின் அம்மானை, நீராடல், ஊசல் என்னும் மூன்று பருவங்களும் மகளிர் விளையாட்டில் வைத்

தக் கூறப்படும். ஆண்பாற் பிள்ளைத்தமிழாயின் சிற்றில், சிறு பறை, சிறுதேர் என எஞ்சிய மூன்று பருவங்களும் மாற்றி அமைக்கப்பெறும். இப்பிள்ளைத்தமிழ் படித்துப் படித்துச் சுவைக்கத் தக்கது. இதில் தமிழினினிமை அறிந்து இன்புறலாம். இஃது ஏனைப்பிள்ளைத்தமிழ்களையும் கற்கப் பெரிதும் தூண்டும் என்பதில் ஐயமின்று.

இப்பிள்ளைத்தமிழ் கற்பார் இக்காலத்து அரியராயினர். இன்று இப்பெருநகர்க் குடந்தையில் இந்நூல் முழுதுங் கற்ருர் இரண்டொரு வரேயாவர். இச்சிறு நூல் முதன் முதலாகப் பதிக்கப்பட்ட காலம் கி—பி. 1869-ஆம் ஆண்டிலே. பின்பு இந்நூலாசிரியர் மாணவர் களுள் ஒருவராகிய ஸ்ரீ மகாமகோபாத்தியாய ஐயரவர்கள் பிள்ளை யவர்கள் பிரபந்தத்திரட்டிலே இதனைத்தொகுத்து 1910-ல் முதற் பதிப்பாகவும், 1926-ல் இரண்டாம் பதிப்பாகவும் வெளியிட்டருளி ஞர்கள். ஆயினும், இந்நூல் கற்கும் பெருவிருப்புடையாருக்கு அது தனிப் புத்தகமாகக் கிடைப்பது இயலாததாயிற்று. என் அரு மைத் தந்தையார் இந்நூலாசிரியராகிய பிள்ளையவர்களின் மாண வர்களுள் ஒருவராகிய ஸ்ரீ பெரியண்ணபிள்ளையவர்களிடம் குடந்தையிலிருந்து தமிழ்பயின்றவர்களாதலின் பிள்ளையவர்கள் வாக்கில் பெரிதும் ஈடுபாடுடையவர்கள். சேக்கிழார் பிள்ளைத் தமிழ், அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ், இந்த மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்களை மிகமிகப் பாராட்டுவார்கள். முன்பு, திருப் பனந்தாட் காசிமடத்துத் தலைவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தலைவனுகஇருந்து சைவப்பணியும் செந்தமிழ் பணியும் செந்நாள் ஆற்றிக்குடந்தைப் பெருநகரை யான் இருக்கை யாகக் கொண்ட நாள் முதல் (அதாவது 1945-ஆம் ஆண்டு முதல்) இதுகாறும் இத்தல சம்பந்தமான நூல்களில் இதனை முதன் முதல் அச்சிடக் கருதியும் உதவி செய்வார் இலராயினர். ‘இலம் பாட்டால் அவதியுறும்’ என்ஞல் இச்செயல் இயலாததொன்றே என்பதை நன்கறிவேன். எனினும், ஆசை மேலிட்டால் பல அன்

பர்களிடம் இதனைவிண்ணப்பித்தேன் : பலிக்கவில்லை. பின்பு இப் பிள்ளைத் தமிழாகிய பெருந்தமிழ் நூலை 'விலக்கேனும் அச்சிட்டுதவுக' என அண்மையில் அச்சகம் நிறுவி இச்சக முழுவதும் புகழ்பெறும் அன்பர் – நிறைநாட்செல்வர் – P. சாமிநாதன்பால் விண்ணப்பித்தேனாக. என்பாலன்பால் 'நானிதனை அச்சிட்டு தவுவேன்' என முன்வந்து சிறந்த முறையில் அச்சிட்டு இன்று அனைவருக்கும் மகவிழாவில் இத்தமிழ் விருந்தை அளிக்கின்றார் கள். இவர்கட்கு என் நன்றியும் ஸ்ரீ மங்களாம்பிகையின் திருவருளும் மிகப்பெருகுவதாகுக. தமிழ்த் தெய்வத்தின் பெயரால் 'முருகன் அச்சகம்' என அமைந்ததும், இதன் சொந்தக்காரர் 'சாமிநாதன்' என அமைந்ததும் இங்கே குறிப்பிடத்தக்கதாம். இவ்வச்சகம் தமிழ்த்தொண்டுகள் 'பல செய்து பல்லாண்டு வாழ்வதாகுக' என வாழ்த்துகின்றேன். "தேடினர் யாவ ரேகொல் எழுவகை யானுஞ் சேர்த்தி—நீடினர் அவரே என்பர் நீணிலத் துயர்ந்த மாந் தர்" என வில்லிபாரதத்தில் அவர் குமாரர் வரந்தருவார் சிறப்பாக அருளிச் செய்தனர். 84-ஆண்டுகளின்பின் இச்சிறுநூல் தமிழ் மக்கட்கு இப்பெருவள்ளலால் இந்நகரிலேயே கிடைக்கப் பெறு கிறது. எழுவகைச் சேர்த்தியுள் 'பிரபந்த நிர்மாணமும்' ஒன்றாம். அது நூல்செய்தல். 'நூல்செய்வித்தலும், நூலை அச்சிட்டுதவுதலும்' அதனுள்ளேயே அடங்கும் எனவே எண்ணுகின்றேன். ஏனைய நூல் களையும் அச்சிட்டுதவ இந்நகர்ப் பெருமக்கள் முந்துவார்களாக எனத் தமிழ்த்தெய்வத்தை வணங்குகின்றேன்.

இந்த (நந்தன–மாசி) ஆண்டுப் பெருவிழாவிலே முதல் நாள் விரிவுரையாக இருக்க வேண்டுமென வற்புறுத்தித், தாம் திருவா வடுதுறையாதீனத்திலே கொண்டுள்ள பேரன்பைக்காட்டி 'மங்க ளாம்பிகை பிள்ளைத்தமிழை'யே கூறுக என அன்புடன் பணித்த பணிப்பொறுப்பாளர்கள் தமிழறிஞர் ஸ்ரீ V. S. குஞ்சிதபாதம் செட்டியார் அவர்கட்கும், ஸ்ரீ D. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கட்கும், ஸ்ரீ G. K. சுந்தரம்பிள்ளையவர்கட்கும் என் நன்றி உரித்தாகுக. இந்நூல் அன்றே வெளிவரச் சித்தமாக அச்சிட்டும்

சில பல காரணங்களால் இன்று வெளிவருகிறது. விரிவுரை முடிவிலே திருவாளர் P. T. S. குமாரசாமிச் செட்டியாரவர்கள் பிள்ளைத்தமிழைப்பற்றிய பல நல்ல குறிப்புக்களையெல்லாம் தாம் கற்றறிந்தவாறே எடுத்துக் காட்டி நூல் நிலயத்திலே பாடவகுப் பொன்று தொடங்கினல் நகர மக்கட்குப் பேருபகாரமாம் எனவும் குறிப்பிட்டார்கள். மேலும் அவர்கள் குறிப்பிட்டதாவது "திருவாவடுதுறை ஆதினத்து மகாவித்துவான் பிள்ளையவர்கள் சுமார் எண்பத்து நான்கு ஆண்டுகளின் முன் இப்பிள்ளைத்தமிழை இயற்றி இக்கோயிலின் முன் மண்டபத்தில் அரங்கேற்றினர்கள். அப்பொழுது மேலகரம் — ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் சந்நிதானமாக இருந்தார்கள். பிள்ளையவர்கள் பேட்டைத்தெருவில் உள்ள திருவாவடுதுறை மடத்திலேதான் தங்கியிருந்தார்கள். அந்த நினைவெல்லாம் இன்று வருகிறது. இன்று விரிவுரையாற்று பவர் அப்பெயருடையவர். பல நூல்களை ஆக்கி அவர்கள் அன்று அரங்கேற்றினர்கள். அந்நூலை அச்சிட்டு இன்று விரிவுரை ஆற்றப் படுகிறது. இப்பொழுது துறைசையிலே மகாசந்நிதானமாக வீற்றிருப்பவர்களும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகளே. சந்நிதானத்தின் திருவருளால் பேட்டை மடத்திலேதான் இவர் வசிக்கின்றார். விரிவுரை நடக்குமிடம் இன்று அம்பிகையின் சந்நிதி. மாயிரு ஞாலமெல்லாம் போற்ற நூல்பல ஆக்கி அவர்கள் தந்தார்கள். அச்சிடப்பெறாத பலப்பல நூல்களை ஆயிரம் ஆயிரமாக அச்சிட்டு உலகுக்கு இன்று இவர் உதவுகின்றார். எல்லாம் சந்நிதானத்தின் அருள். திருவருட்குறிப்பு இருந்தபடி என்னே! என்னே!! எனப் பெரிதும் பாராட்டினர்கள்." இனி,

முருகன் அச்சகம் நிறுவிய காலத்துத் தொடங்கப்பெற்ற முதற்பணி ஸ்ரீ ஆதிகும்பேசுாருடையது. அதன்பின் எங்கள் ஆதினப்பணியாகிய 'ஞான பூசை' 'சிவபூசைத் திரட்டு' அச்சிடல், அவை சைவப்பணி. இன்று இப்பிள்ளைத்தமிழ், இது தமிழ்ப்பணி. இக்குறிப்பெல்லாம் தமிழ் மக்கள் சிந்தனைக்குரியனவாம் என்க.

திருப்பனந்தாளினின்று இப்பெருநகர்க் குடந்தைக்கு வந்த நாள் முதல் சுமார் மூன்று ஆண்டுகள் ஸ்ரீ மங்களவிலாச நூல் நிலயத்திலே நிலைத்த தமிழ்த் தொண்டாற்றிவரக் கோயிற் பொறுப்பாளர்கள் உதவினர். இவ்வுதவியைக் காலமறிந்து நன்கு செய்வித்தவர்கள் 'மங்களாம்பிகா பிரஸ்' சகோதரர்களேயாவர். அதனால், ஏராளமான மக்களினிடையே நாடோறும் முறையாக அருணாசலபுராணம், திருவாதவூரடிகள்புராணம், சிவரகசியம், கந்தபுராணம் முதலிய சிவபுராணங்கள் படனஞ்செய்யப்பெற்று வந்தன. அச்சிவபுண்ணியப்பேற்றால் திருவாவடுதுறை ஆதீனத்திலே ஸ்ரீலஸ்ரீ குரு மஹாசந்நிதானங்களின் திருவருட்பேறு கிட்டத் தமிழ்த் தொண்டாற்றி நாற்பது நூல்கட்கு மேலாக அச்சிட்டுவெளிப்படுத்தத்திருவருள்செய்தது ஸ்ரீமங்களாம்பிகையே என்பதைக் கனவினும் நனவினும் மறவேன். திருவருளும் குருவருளும் பெருக அடியேனையும் தன்னருட்பணிக் குரியவனாகக் கடைக்கணித்து இதனையும் நிறைவேற்றியருளிய ஸ்ரீ மங்களாம்பிகையைச் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன். குற்றம் பொறுத்தருளுக.

பேட்டைமடம்,<br>
குடந்தை,<br>
27—2—53.

இங்ஙனம்,<br>
சித்தாந்தசைவமணி —<br>
**த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,**<br>
திருவாவடுதுறை ஆதீன வித்துவான்.

—

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சாத்து கவிகள்.

---

I

கும்பகோணம் புரோவின்ஷியல்காலேஜ் தமிழ்ப்பண்டிதர்,

திரிசிரபுரம் — **சி. தியாகராாசசெட்டியாரவர்கள்.**

பூமேவு மடமாதர் முதலியோர் தன்பணி புரிந்திடற் குரிய ராகிப் – பொலிதரச் செயலொன்று கருதியோ தன்பணி புரிந்த வர்கள் எந்தஞான்றும், மாமேவு மங்களம் பெறுவர்எனல் வெளி யிடல் மதித்துமால் அயன்முனோர்கள் – வாழ்நாள் பிடுங்கும் கொடுங்கூற் றெனத்தோற்று வலியவிடம் அமிர்தமாகிச், சேமேவு பான்மிடற் றக்கழகு செய்யத் திருக்கணேக் கருள்குடந்தைத் – தெய்வமங் களவல்லி திருவடியில் அஞ்சுவைத் தேனூற் றெடுக்கு மின்சொற், பாமேவு பிள்ளைத் தமிழ்த்தொடை புனைந்தனன் பற்று எனக்குமறிஞர் – பாவவையில் இடமருளும் மீனட்சி சுந்தரப் பைந்தமிழ்ப் புலவரேறே.

II

சேலம் — **சிவசிதம்பரம்பிள்ளையவர்கள்.**

பூமேவு மலரயனும் மணிவண்ண மாலும் புரந்தரன் முதற் புலவரும் – பொற்புமலி கலைமகளும் மலைமகளும் உன்னரிய பூரணி முருக்குநிகரும், மாமேவு மெல்லிதழ்ச் சுந்தரி முதற்பல்விண் மடந் தையரும் வடமீனெனும் – மாண்பெயர் புனைந்தமக ளுங்கமலி னிப்பெயரை மருவியோளிர் இன்றமாதும், காமேவு மனமுடைத் தங்கள்தங் கட்குரிய கைப்பணி விழைந்தவிலக் – கடிதருள் சாந்

தன்பர் இதயமலர் மேவுமங் களநாயகிக்குலமார், பாமேவு பிள்ளைத் தமிழ்க் கவிதை சூட்டினன் பாவுறு சிராப்பள்ளிவாழ் பண்பன்மீ னாட்சிசுந் தரநாம நாவலன் பைந்தமிழ்ப் புலவரேறே.

III

சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்,
திரிசிரபுரம் — சோடசாவதானம்,

**அ. சுப்பராயச்செட்டியாரவர்கள்.**

துன்னுபுகழ்க் குமாகுரு பரமே தக்கோன்
தொல்பகழிக் கூத்தன்முதற் புரிவோர்தம்பால்
மன்னுமுது தமிழாய்ப்பஃ றலபு ராணம்
வடமொழியி னின்றுதமிழ் மொழியில் தந்தோன்
மின்னுமணிக் குடந்தையுமை தமிழைச் சொன்ன
மீனாட்சி சுந்தரநா வல்லோன் தன்பால்
தன்னமில்சீர்த் தலைமைதழைத் தோங்கும் பிள்ளைத்
தமிழ்பிள்ளைத் தமிழாகித் தயங்கிற் றன்றே.

IV

சென்னை ப்ரீ சர்ச்மிஷன் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்,

**தெய்வசிகாமணிமுதலியாரவர்கள்.**

தக்கவர்கள் புகழ்குடந்தைத் தலத்திலொரு தனிக்குடத்தில் தழைவுற்றோங்கும், முக்கணொரு செங்கரும்பின் இடப்பாலின் முளைத்தெழுந்த முக்கட்பைங்கேழ், நக்கவொரு பசுங்கரும்பின் இருதாண்மேல் நவில்பிள்ளைத் தமிழாம் மாலை, தொக்க அன்பாற் சூட்டினனல் மீனாட்சி சுந்தரநா வலவரேறே.

V

சென்னை ப்ரீ சர்ச் மிஷன் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்,

**சின்னசாமிபிள்ளையவர்கள்.**

மலையமுனி தவப்பேறோ கலைமகளின் தவப்பேறோ மறிநீர் வைப்பில், தலைமைபெறும் இவன்சனனம் எனப்பலபிள்ளைத்தமி

மைச் சாற்றும் வல்லோன், குலவில்புகழ் மீனுட்சி சுந்தரநா வல ரேறு குடந்தைமேய, மலைமகள்மேல் ஒருபிள்ளைத் தமிழுரைத்த தொருவியப்போ மதிமிக் கீரே.

## VI

### எட்டயபுரம் — சுப்பிரமணியபிள்ளையவர்கள்.

காரார் தருபொழில் சூழ்குட மூக்கமர் கன்னியின்மேற்
சீரார் தருமொரு பிள்ளைத் தமிழினைச் செப்பினனுற்
பாரார் தருபெரு நூல்களு மோர்கோடிப் பன்னும்வல்லோன்
ஊரார் தருபுகழ் மீனுட்சி சுந்தர நாவலனே.

## VII

### அரங்கேற்றுவித்தவர் சிறப்பு.

கார்கொண்ட பொழில்சூழ் குடந்தைமாநகரின்மிகு கவின்மாத வம்பேட்டைவாழ் — கல்விச் சிறப்பினுயர் ஆறுமுக நிபுணனருள் காதல்கட ராசமகிபன், ஏர்கொண்ட இளவல்பர சிவதரும மேநா ளும் எண்ணுதல் உரைத்தலாற்றல் — இயல்பினுற் றேன் அடியர் உள்ளக் குறிப்பறிந் தினிய அமு தூட்டலாதிப், பார்கொண்ட பல் பணியும் முகமனெ டியற்றுவோன் பகர்வார் பகர்ச்சிமுற்றும் — பாவுதன் புகழாக மிளிர்கனக சபையெனப் பகருநன் நாமவள்ளல், சீர்கொண்ட மங்கள மடந்தைபிள் ளைத்தமிழ்ச் சீரரங் கேற்றுவித் தான் — செல்வமுடன் ஆயுளும் மிகப்பெறீஇ அனையனித் திண் புவியின் உறவாழ்கவே.

---

இவை பழைய பதிப்பைச் சார்ந்தவை. இந்நூல் பதிப்பித்த காலம் சென்ற விபவ ஆண்டு (கி. பி. 1869) ஆனிமீ என்பர் ஸ்ரீமத் ஐயரவர்கள்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# செய்யுள் முதற் குறிப்பகராதி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குடந்தை

# ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்.

## பாயிரம்.

### ஆதிவிநாயகர்.

பூமேவு கொன்றைப் பொலஞ்சடா டவியிற்
புதுப்பிறை நிலாவெறிக்கப்
போகுமிட மின்றித் துணங்கற லடிக்கீழ்ப்
புகுந்தது படிந்ததேய்ப்ப
நாமேவு வினையுடைக் கருமுடி கப்பரி
நயந்திசைய தாயகண்டை
நாதிக்க மிக்குலவு மாதிக்க டக்களிறு
நன்கெமதுள் வாரிகொளலால்
மாமேவு பிரமன்முற் பற்பல்புவ னங்களினும்
மருவுப லுயிர்க்கு மென்றும்
மங்களந் தருமிறைமை தன்னிடத் தன்றியயன்
மாட்டில்லை யெனவ்விளக்கப்
பாமேவு தெய்வமங் களநாய கிப்பெயர்
பரித்தமுத கும்பநாதர்
பாலருளின் மேவுங் குடந்தைப் பிராட்டியைப்
பாவுநற் றமிழ்தழையுமே.

## 1. காப்புப்பருவம்.

### திருமால்.

பூமாலை சூடுமொரு கும்பம் பொருந்துபரி
பூரணப் பராமர்சகல
புவனப் பரப்புயி ரனைத்துமின் பக்களி
பொருந்தவிரு கும்பநறிய

தேமாலை சூடிப் பொருந்தப் பொறுத்தநுண்
சிற்றிடைக் கொம்பைவம்பைச்
செறிபொழில் சுலாயகுட மூக்கமரு மங்களச்
செல்வியை யுவந்துகாக்க

மாமாலை யைம்பான் மலர்ப்பசுங் கொடியையகன்
மார்பின் புறத்துவைத்த
வண்ணந் தெரிந்தும் பொறுத்திருந் தாள்நில
மடக்கொடி யெனத்தெரிந்து

பாமாலை சாலுமொரு கோட்டின் புறத்தும்
பராவிய வயிற்றகத்தும்
பண்பினைப் படிமகளை வைத்துமகிழ் வித்துமகிழ்
பைந்துழாய்த் தோளண்ணலே. (1)

### அமுதகும்பேசர்.

வேறு.

பொன்செய் கொன்றையொடு மின்செய்வெண் பொடிபொ
லிந்தமைந்தமரு மந்தனிற் றேக்கடி
பொன்றலின்றிமுகை விண்டதண்டுளவு
பொங்குசந்தமும லாந்திடச்சேர்த்தவர்
பொன்புணர்ந்தவம டந்தைபின்றிகழ்
புறந்தழும்படியும் அம்பெனக்கூட்டினர்
புங்கமங்கையவள் வெம்புறங்கருணை
பொங்கனன்கமரி ரும்புகழ்க்காட்சியர்

கொன்செய் தொண்டருட னண்டருங்குழுமல்
கொண்டிறைஞ்சநவி லம்பலக்கூத்தினர்
கொங்குதங்குமல ரின்கணங்கையர்கு
ழைந்துகும்பிடுக ருங்களச்சீர்த்தியர்
குங்குமங்கலவு மென்புயங்கொளொரு
குன்றர்குன்றமர்பெ ருந்திறற்பேற்றினர்
குன்றலின்றிமறை யந்தநன்றுசெறி
கும்பலிங்கர்சர ணந்தலைச்சூட்டுதும்

மன்செயன்புடையர் நெஞ்சமென்றிசை
மலர்ந்தகஞ்சமம ரஞ்சநற்பேட்டினை
வஞ்சநெஞ்சர்கன வின்கணும்புகன்
மறந்திருந்தவரு ளம்பையைப்பாற்பசு
வந்துமுன்பொர்புன றந்திறைஞ்சவுள்
மகிழ்ந்தசுந்தரியை யண்டமுற்றேத்திட
மன்றநன்றருள்சு ரந்துநின்றருண்ம
ணந்தகொம்பையொரு வம்பையிட்டார்த்திடும்

இன்செய் கொங்கையமு தங்கவர்ந்தோர்மழ
வென்புனைந்துருகு செந்தமிழ்ப்பாச்சொல
இன்பவுந்தியுயிர் முங்கமுன்புதவி
எஞ்சலின்றியொளிர் வஞ்சியைத்தீட்டரி
தென்றணங்குகளு ளங்கொள்சந்தவரு
வின்பசுந்திருவை நம்புமுட்பேற்றினை
என்றுதங்குமதி லங்குடந்தைநகர்
எங்கள்மங்களம டந்தையைக்காக்கவே. (2)

## ஆதிவிநாயகர்.

### வேறு.

பார்தரு நான்முக னேர்தலை யேற்றொளிர்
பான்மையர் மான்முகி லூர்திற மேய்ப்புற

ஆர்தரு மோதகர் மூடிக மேற்பொலி
ஆதிவி நாயகர் தாண்மல ரேத்துதும்
ஓர்தரு வார்மன னூடவிர் பேற்றினை
ஓமுத லாமறை யோலிடு வாழ்க்கைமெய்
தேர்தரு தேவர்கள் சூழ்குட மூக்கமர்
தேவியை யோவவில் காவல தாற்றவே. (3)

முருகக்கடவுள்.

வேறு.

அருமலைக்குடிலை யுளதரைத்தநவி லறையிருக்கெனவி
ஞவாமடக்குபு நீண்முடித்தாக்கிமெல்
அலரவற்சிறையி னிடுபுமுக்கணிறை அவனிரப்பவிடு
ஞானேதயக்கும ரேசனைக்காப்பொலி
குருமணித்தவிசி னமரிறைக்குமகள் கொழுமலர்க்கைதழு
வேர்சால்புயத்தனை நீள்வரைப்பாற்றுதை
குறவர்பெற்றவொரு மடநடைக்குமரி கொழுநனைப்பொருவில்
காலாயுதக்கொடி யாளனைப்போற்றுதும்
மருமலர்க்கணமர் மகளிரைத்தொழுநர் மருவுறத்தருகண்
மானுளமுற்கொடு மாமலப்பூட்டற
வழிநிலத்தகுதி யொழியெமக்குமொழி வகையனுக்கிரக
மேயோவறப்புரி வாலனைப்பேட்டினை
உருகுபத்திமைய ருளவளத்தளியி னொளிர்விளக்கையமு
தேயாமொழிச்சியை யாரணப்பேற்றினை
ஒருகுடத்தமரு மிருவருக்கரிய வொருவர்பக்கமமர்
மாதேவியைப்பெரு வாழ்வினைக்காக்கவே. (4)

பிரமதேவர்.

வேறு.

ஈன்றவற் கில்லவளு முணவுமா கப்புவியும்
இயல்கடி மணஞ்செய்தேமும்

இனியஉவ ளகமுமா கக்கடலு மாலையும்
இருப்பிடமு மாகவனமும்

தோன்றவழி யுங்குடையு மாகவரை யுஞ்செய்து
சுதன்மகன் திறவுகோலாத்
தூயதாய் மனைவிதற் குறையுளுஞ் செய்துமகிழ்
தோன்றல்நான் முகனளிக்க

நான்றசடை யார்கும்ப நாயகரெ னும்பெயர்
நயத்தல்கண் டங்கண்மீன
நாயகி யிடைச்சிங்க நாயகி யருட்கன்னி
நாயகி யறம்பலவும்வாழ்

ஆன்றகைக் கடகநா யகிகாது மகரநா
யகிநுதற் றனுநாயகி
அடியமிதை யத்துலா நாயகி யெனப்பல
அமைந்தமங் களவுமையையே. (5)

### இந்திரன்

ஓங்குதிரை பலவெழும் பாற்கடற் கருவூலம்
உதவுபல பொருள்களுள்ளும்
ஒருதம்பி பாகமோ ராரமொரு பெண்ணமு
துடன்கழிய மூத்ததற்குப்

பாங்குயர் விசேடபா கம்பெண்கள் பலர்தருப்
பலகாம தேனுவென்னும்
பசுநிதிய மணியானை பரியாதி பெற்றுமகிழ்
பண்ணவர்க் காசுகாக்க

வீங்குகரு ணைப்பிழம் பாயகும் பேசர்க்கு
மேவுதாய் தநயைதங்கை
விழைமனைவி யாகியொரு தான்மருவ லாலவர்செ
மேனியிற் பாதிகொண்டு

தேக்குபல வோடங்க மல்லாத வேணியிற்
சேரக் கங்கைமங்கை
செறிதரத் தகவினமர் வித்தமகிழ் மங்களச்
செல்வச் செழுங்கொடியையே. (6)

**திருமகள்.**

வேறு.

ஆரு நினைப்பா கியதிறப்பு மடரு மறப்பா கியவடைப்பும் — ஆய தொழிலை நாடோறு மாற்றும் சகல கேவலம்போல், ஒரு மகன்பே ரனுமுடன்வந் துதித்த வனுமா மிருபுலவர் — உரைத்த வியற்றும் இதழ்க்கதவத் தொண்பூ மனையாள் பதம்பணிவாம், பாரும் விசும்பு முய்யவொரு பகழி சிலைக்கைக் கொண்டமுதம் — பரவு மொருகும் பஞ்சிதைத்த பரமர் போற்ற ஞானசுதை, வாரு மிருகும் பம்பரித்து வரிவிற் கழையும் மலரம்பும் — மாணக் கொண்ட மங்களமா மயிலை யினிது காக்கவென்றே. (7)

**நாமகள்.**

கற்று வெனவுட் கரைந்துருகக் கல்லா வெமது வாக்கிடத் தும் — கலந்த கருணை யாற்பிறந்து கதிக்குஞ் சீர்த்தி யுடம் பிறுக்கும், வற்று வதற்குக் காரணமாய் வயங்குந் தெய்வ வுடம் பிறுக்கும் — வருவேற் றமைமாற் றியவெண்டா மரைப்பி ராட்டி பதம்பணிவாம், சற்று தாவு கொடுத்ததுவே சார்பா வயங்கி யது பெருக்கித் — தணவா மலமா திகள்தவிர்த்துத் தனித்த ஆன்ம மடவாரை, முற்று வொருதற் குரியதவன் முகிழ்க்கும் போக முறவிடுத்து — முடியா மகிழ்கூர் குடமூக்கு முதல்வி தனைக்காத் தருளென்றே. (8)

**துர்க்கை.**

சயங்காத் திருக்கு மடங்கல்விடு தறுகண் மகிடம் தலைசாயத் — தருவ மகிடத் தலைசாய்த்துத் தயங்கு மணியா தனம்பரிக்கும்,

இயங்காச் சிங்க மிவரமரர் எவருநாணம் தலைக்கொள்ள – இயங்கும் சிங்கம் இவர்கன்னி எழிற்பொற் பாதம் முடிக்கணிவாம், உயங்காக் கருணைத் திறத்தின்மல ரும்பன் படைக்க மால்காக்க – ஒண்ணு வமுத கடத்துதித்த ஒருவர் திருமே னியினளவாப், பயங்காட் டிடுவான் கவர்ந்ததொரு பாதி எனினும் அவருள்ளம் – பண்பின் முழுதும் கவர்ந்துமகிழ் பாவை தனைக்காத் தருளென்றே. (9)

## சத்தமாதர்.

வேறு.

திருமறை தேர்பன மீதுற்றபொற்பினள்
திகழிட பாசல மூர்தற்றிறத்தினள்
சிறைமயில் மேல்மயில் நேருற்றுகைப்பவள்
செறியரா வூணுள தேறித்திருப்புகள்

இருவிற லார்தரு சீயப்புறத்தினள்
எழிலியின் மாமதம் வீசுற்றவெற்பினள்
இருளில் விராவொரு பேயைச் செலுத்துநள்
எனுமெழு மாதர்கள் தாளைப் பழிச்சுதும்

மருமல ரோன்முத லோரற்பின்மித்தலும்
வழிபட ஆருள் ஏயச்செலுத்தியை
வருகடல் சூழுல காளுற்றசத்தியை
மலர்கழை கூரயில் பாசக்கரத்தியை

அருமறை ஆகமம் யாவைக்கும்வித்தென
அவிர்குட மூடெழு சோதிப்பாற்கினி
தமைதா வோர்பயன் மேவுற்ற தத்தையை
அருளுரு வாமொரு மாதைப்புரக்கவே. (10)

## முப்பத்து மூவர்.

வேறு.

அகனமர்ந்துதொழும் அடியர்சிந்தையமு தனையநன்றமர்ப
ராபரையை எப்பெற்றி யாருநன்கேத்திட

அருள்சுரந்துபொலி பெருமையம்பிகையை அளவிலின்பசுக
பூரணியை யொப்பற்ற கோமளங்கூர்த்திடும்
முகன்மருங்குல்கலி முலையகங்கொள்நகை முகிழ்செறிந்தகரு
வார்குழன் முதற்பொற்ற யாவையுந்தீட்டுபு
முளரிமங்கையர்தம் மனனகங்கொடுபன் முகமன்விண்டுதெரி
காரணியை அப்புற்று லாநறும்பூச்சடை
இகன்மலிந்தபுய இறைவர்தஞ்சமுற இருகைகொண்டுதழு
வாரணியை முட்டுற்றிடா நலம்பூட்டிடும்
இயல்புகொண்டவிரு விழிமடந்தையைநல் இனிமைதங்குசுவை
ஆரமுதை எப்பற்று மேவிடுந்தித்தொழில்
நகன்மறந்துதமி யனுமுயர்ந்திடமெய் நலமியைந்தருள்பு
ராதனியை வட்டத்து மேவுமண்போற்றிடும்
நலகுடந்தைநகர் அமர்தருங்கருணை நவிலுமங்களையை
நால்வகைய முப்பத்து மூவருங்காக்கவே. (11)

முதலாவது காப்புப்பருவம் முற்றிற்று.

---

## 2. செங்கீரைப் பருவம்.

வானமுத வாயவொரு மூன்றனுக் கும்பொதுவில்
மன்னியொளிர் கின்றவபய
வரததா மரைகள்கில மட்டுமுறல் என்னையென
மற்றவை அழுக்கறுக்கும்
ஆனவது கோளினவைய தன்பயனே உறுகமல
ராள்ஒருகை தாங்குவேமென்
றகஞ்செருக் கினைச் செருக்கொழிய அனையள்மாற்
றவளெனும மனுவகைசெய்த
ஈனமக லினையதா மரைபதித் தொருதாள்
இருத்தியொரு தாளெடுத்தே
எழில்கனி கனிந்தமுக தாமரை மலர்ந்தசைய
இருமணிக் குழைவில்வீசத்

தேனமர் நறுங்குதலை சீர்ப்பமங் களவல்லி
செங்கீரை யாடியருளே
தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி
செங்கீரை ஆடியருளே. (1)

முறியனைய நின்காத் தாமரை சுமக்குமிரு
முற்றிழைய ரைச்சுமக்கும்
முனிவர்கள் நினைச்சுமக் கப்பெறுந் தவமின்மை
முன்னுபு துயர்க்கண்முழுக
மறுவிலுயர் பனிவரைச் சாரற் சுனைக்கணினை
மாண்பிற் சுமக்கப்பெறும்
வனவம் புயம்பொலிவு பெற்றுமீ ளவுநின்
மணாளனொடு தாங்கப்பெறும்
அறிவுபெற வின்மையுள் நினைந்ததுவு மற்றாக
அன்பின்நெக் குருகும்அடியர்
அமலவிரு தயகோக நகமலர் களிப்புமிக்
கடையவதின் மறையந்தமும்
செறிவுரு மணாளரொடும் அமருமங் களவல்லி
செங்கீரை யாடியருளே
தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி
செங்கீரை ஆடியருளே. (2)

பாமன் திருக்கண்ட நாளமும் மிசைச்சென்னி
பற்றிய அடிப்பாப்பும்
பாவுமதன் உச்சிப் பொருட்டுமறு கொடுஞ்சூழ்
படும்சடைப் பைம்புலிதழும்
உரமன் புயங்கங்கள் பைத்தபை யகஇதழும்
உவைவா னரம்புநறுநீர்
ஒண்சுவைத் தேனுமொளிர் வெண்பொடித்தாதுமிக்
கோங்குகண் மணிவண்டரும்

வாமன் சிறப்பினொளி ரக்கொண்டு நாடொறும்
வயக்குமொரு தாமரைப்பூ
வண்காத் தாமரைப் பூக்களொடு மதியொடும்
வணங்கமுனி வொழிசிலம்பு

திரமனிரு தாமரைத் தங்கமங் களவல்லி
செங்கீரை யாடியருளே
தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி
செங்கீரை யாடியருளே. (3)

அந்தையுற வந்தவரை பேர்த்தெடுத் தான்சிரம்
அனைத்தும்செரி தாமடங்கல்
ஆருயிர் குடித்தவொரு தானொரு விரற்றுதியி
னுடைத்த் திடலுமனையான்

நிந்தைதபு நதிபுரிந் தழுதலும் இரங்கிவடி
நெடியவா னாதிநல்கி
நீபோ வெனச்செலுத் தியபின் பிராகவன்
நிகழ்ச்சியுரை செய்தபோற்ற

முந்தைவினை வாலவன் காயவேற் றஞ்செய்த
முதல்வர்போ லாதநிருமுன்
முற்றபே ரன்புபுரி சொன்னரோ மற்குவசி
முனையவா னாதிநல்கிச்

சிந்தைமகி ழச்செய்த மகிழுமங் களவல்லி
செங்கீரை யாடியருளே
தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி
செங்கீரை யாடியருளே. (4)

பிருகுமுனி வன்பெரிய முனிவனுய்ப் பின்புகவில்
பேச்சுநிலை நிற்கவற்கும்
பேர்பல எடுத்தோதி யுருவுபல வற்றையும்
பெட்டொருசி லோரிறைஞ்ச

அருகுதலின் மாதவப் பெருமையான் மாதவன்
அவாவுமக வாகச்செய்தாம்
அவிர்நா மெனுங்கலைக் கோட்டுமுனி காசிபனை
ஆதியர் செருக்குநீங்கக்
கருகுத லிலாதபடை கொண்டுபொரு பண்டனெதிர்
கைவிரல்கள் சிறிதுவிதிராக்
கரியமால் உரியவுரு ஒருபதும் வெளிப்படக்
காட்டிநெடு வான்புரந்து
திருகுதவிர் பவருளத் தமருமங் களவல்லி
செங்கீரை ஆடியருளே
தெய்வக் குடந்தைவளர் சைவச்செழுங்குமரி
செங்கீரை ஆடியருளே. (5)

வேறு.

மணிகெழு பஃறலை மாசுண நாளமும் மன்னு புறஞ்சூழும் – வாரிப் புறவித ழும்திகி ரிக்குல மால்வரை அகவிதழும், கணி கெழு தோள்வரு ணன்புரவாற்று கடற்சுவை கூர்மதுவும் – காசினி யாகிய மகரந் தழுமுயிர் கள்ளெனும் வண்டுகளும், திணிகெழு பொன்வரை யாய பொகுட்டும் செறிதா வதுசூழும் – திகழ்வரை யாகிய தாதுவும் வாய்ந்தொளி செய்யுமொர் கோகநகம், அணி கெழு தன்மையின் அலர எழுங்கதிர் ஆடுக செங்கீரை – அங்கண் மலர்க்குழல் மங்கள நாயகி ஆடுக செங்கீரை. (6)

புவிபுகழ் மறையின் சார மெனப்பொலி புண்ணிய வெண் ணீறும் – பூண்பல மணியின்சார மெனப்பலர் போற்றும் கண் மணியும், செவிகவர் மந்திரசார மெனப்பொருள் செறியும் பத மைந்தும் – தெள்ளிய மாதவ சாரமெனக்கொடு திகழு முதுக் குறையோர், குவிகைய ராகஎண் ணில்லாத் தீர்த்தக் குலமலி சாரமெனக் – கூறு மகப்புனல் வதிதல சாரக் குடமூக் கிடமாக, அவிரொளி சார விமானம் இருப்பவள் ஆடுக செங்கீரை – அங்கண் மலர்க்குழல் மங்கள நாயகி ஆடுக செங்கீரை. (7)

நிலையுயர் எண்ணில்பல் அண்ட முயிர்த்து நிலாவுவெள் ஓதிமமே – நினைபவர் வினைஅரா வங்கள் விலங்கிட நிகழும் பசு மயிலே, கலைதலில் வஞ்சர் எனும்புயல் முன்குறு காத கருங் குயிலே – ககனம் அளாய விலங்கல் உதித்தருள் கான்ற செழுங் கிளியே, மலைவற ஓர்கழை ஓர்காம் வாங்கி வயங்கு கொழுங் கழையே – மாண்ட·குடத்தறை செந்தேன் வாமம் வயங்கு பசுந் தேனே, அலையமு தொடுகலை அமுதம் இறைஞ்சமு தாடுக செங் கீரை – அங்கண் மலர்க்குழல் மங்கள நாயகி ஆடுக செங்கீரை. (8)

வேறு.

தருமவெள் ளேற்றகன் முதுகமர் வார்க்கிடம் மேவிய பைங் கோதை – சதுமுக மூர்த்திமு தலியர்ப ராய்த்தொழ வாழும்இ ளம்பேதை, கரும முருத்தவ எளியமும் நீற்றிட நாளும்ந லங்கூடும் – கருணைக டாய்ப்பர சுகவடி வேற்றகு மாரிம ணங்கூரும், மருமலர் போர்த்திய குழலுடை யாட்டிக ருவொழு கும்தாமம் – வனமென வாக்கிய புயலமு ளுப்புரி பூரணி பொங்கோதை, அருமறை யாற் புகல் ததிமுழு தேற்பவள் ஆடுக செங்கீரை – அவிர்குட மூக்கமர் தருமொரு பார்ப்பனி ஆடுக செங்கீரை. (9)

வேறு.

பொறிவழி நுழைபுலன் அறமிளிர் பவருள்நி றைந்தாய் அன் பாளர் – புகல்கின சரணென அடைதொறும் இனிதுபு ரந்தாள் நக்காய்மெய், அறிமுறு தவர்சுவை அமுதென நுகரும றங்கூர் கண்டேசொல் – அமுதமும் முதுதிரை அமுதமும் உறுகண்அ ணங்கே சங்கோதை, மறிதலில் கடலினும் மிகவெழு கருணைம ருந்தே சந்தானம் – வளர்தலம் முதலிய பலவும்உள் மகிழும டந்தாய் பண்பாடல், செறிமறை முதல்கடு இறுதியும் நிறைபவள் செங்கோ செங்கீரை – நிடலவில் குடமுதல் இடமமர் மடமயில் செங்கோ செங்கீரை. (10)

இரண்டாவது செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

## 3. தாலப்பருவம்.

செய்ய கனகம்வெள்வயிரம்சிறந்த கமல ராகமொளி – திகழு நீலம் வயிடூயம் செறிய ஒன்றன் மேலொன்று, ஐய முறைவத் துற வடுக்கி அவிரைம் பூதத் தடுக்கென்ன – அமைத்த திருமாளிகை மேலால் ஆடுந் துவசத் தருநுனியில், எய்ய இவர்நீ ருண்டுபசந் தெழுந்த முகில்கோப் புண்டுசைவர் – இங்கா பாலர் கொடிமிடை தற் கேதி யாதென் றிருங்கடல்சூழ், வையமதிக்கப் பொலிகுடந்தை வாழ்வே தாலோ தாலேலோ – வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (1)

விண்ட மலர்க்கா வகத்துதய வீபத் தினைக்கண் டிளமந்தி – விழையும் செந்தேத் தடையென்ன விரைந்து கடுவன் அவற்பற்றக், கண்ட புலவர் குரங்கியெனக் கரைபேர் அலவற் கிட்டலுறக் – கரைவா மெனவக் கடுவனுமாக் கவியென் பெயர்க்குத் தகவுணர்ந்து, கொண்ட பயத்தின் விடுத்திலச்சை கூர்ந்து தனது குலம்புரந்த – குனிவிற் புயத்தோன் செயல்நினைந்தக் கோலப் பிணவை எழு காதல், மண்ட அணைக்கும் செழுங்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ – வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (2)

உன்னும் வடுகன் ஒருகோளுண் டுமிழ்ந்தான் இதுபல் கோள் களுமுண் – டுமிழா நிற்கும் எனஅவற்றை உட்கொண் டுடனே புறந்தோற்றி, மின்னும் பொழிலின் கடுப்பொழியும் வியன்நீர்த் தடத்துக் கமலமுதல் – வீவார் மதுவும் குலைத்தருவின் விடப மதுவும் பெருக வெகின், என்னும் பறவை படிந்துமிசை எழுங் கால் வழிதேன் விழைந்தொழுங்கின் – எய்தும் அளிவெண் படமு மதற் கிட்ட கரிய கயிறுமென, மன்னு மழகார் திருக்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ – வளங்கூர் கருணை மங்கள மா மயிலே தாலோ தாலேலோ. (3)

ஆய்ந்த பொறிவண் டடைகிடக்கும் அங்கட் பொழிலின் மடமாதர்க் – கணியா டவரோர் ஆவியகத் தகத்தா மரைத்தேம் புனலுங்கோட், டேய்ந்த தருப்பூ மதப்புனலும் எனைத் தருப்பூப் பொழிதாவிழ்ந் – தியைந்து பாய்தேம் புனலுங்கண் டிந்நீர் முந்நீர் எனக்கூறத், தோய்ந்த முகிலைக் காட்டுகெனத் தூவெள் ளனம் வீழ்ந் தருப்பாசி – தொடா வெழல்கண் டிதவென்னத் தோலர் மகிழ்விற் றலைசிறந்து, வாய்ந்த நலங்கூர் திருக்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ – வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (4)

பழுத்து விழுந்த நறியசுவைப் பாகற் கனிமேல் ஒருதென் னம் – பழமுக் கூழ்த்து விழுந்தமரப் பசுந்தேன் பொழிந்து மலரி றைத்தக், கொழுத்த வரிவண் டிசைபாடக் கொண்டகனியின் பெரும்பொறையால் – குலவு மெதிரே பலசாகை குரங்கல் கும்பத் ததித்தொருமா, அழுத்து வடுப்பூண் முடிமுக்கண் அமலற் காட்டி அருச்சித்தாங் – கறைந்து நிவேதித் தெதிர்வணங்கும் அன்பர் நிகர்த்தல் அறிந்தமரர், வழுத்து மலியும் திருக்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ – வளங்கூர் கருணை மங்களமா மயிலே தா லோ தாலேலோ. (5)

வேறு.

குமிழ்மல ருங்குளிர் முல்லையும் இந்திர கோபமும் வாமானும்– கூக்குயி லும்பின் கூறம ருலகு குலாம்பொருள் எனவளையா, இமிழ் கலி மாமறை ஐம்புலன் உளதெனல் இத்தொகை யாலுணர்வான் இயல்பின் அமைந்துபல் உலகும் அவாவ இயைந்ததெனத்தோற்ற, அமிழ்து பொருஞ்சுவை அஞ்சனை நீர்நிலை ஆன்ற சுருத்தலை நன்– காய கழைச்சிலை தாங்கி விளங்கிடும் அம்பொருகமுடையாய், தமிழ் தெரி யுங்குட மூக்கமர் பைங்கிளி தாலோ தாலேலோ – சங்கள வுங்கர மங்கள நாயகி தாலோ தாலேலோ. (6)

விண்டலர் செவ்விய தாமரை கொல்லோ வெண்டாமரை கொல்லோ — விரவுதல் பெற்றொளிர் தாமரை கொல்லோ வேறெது வாமென்று, தொண்ட ருளங்கொடு பன்முறை ஆய்ந் தும் துணிவு பெருமையினல் — தொகுபொது விற்பைந் தாமரை யென்றே சொற்றனர் களிதூங்க, முண்டக வதனக் கலைமக ளுங் கடல் முற்படு திருமகளும் — முரணுத வின்றி வசித்திடு மா ரொளிர் முகதா மரையுடையாய், தண்டமிழ் தெரிகுட மூக்கமர் பைங்கிளி தாலோ தாலேலோ — சங்கள வுங்கா மங்கள நாயகி தாலோ தாலேலோ. (7)

அருமறை முழுமையும் ஆயதன் முதல்நடு அந்தம் உரைப்பது மாய் — அத்தகு மறையின் வாம்பு கடந்த அதீதமு மாயுளநெக், குருகுதல் கொண்டு விடாது நினைப்பவர் உள்ளவிர் தீபமுமாய் — உற்றடி போற்றி வணங்குநர் எய்ப்புத வத்தகு நிதியமுமாய்த், திருகுத வின்றி உரைப்பவர் நாவில் தீஞ்சுவை அமுதமுமாய்த்— திகழ்தரு பொற்கொடி யேயள வில்லாத் தெய்வத் திருமணமே, தருதமிழ் தெரிகுட மூக்கமர் பைங்கிளி தாலோ தாலேலோ — சங்கள வுங்கா மங்கள நாயகி தாலோ தாலேலோ. (8)

சிந்தனை யொன்ற நினைந்துக வர்ந்திடு தேனே வானுடர் — தெண்டிரை யின்க ணடைந்தனர் கொண்டது தேரு வாருக, வந் தரு ளுஞ்செ யலின்றலை நின்றகண் மானே யநேயே — மண்டவி ருந்த வாண்டர்ப ணிந்தெழு வாழ்வே சூழ்பேறே, கந்தம ளைந்த கருங்குழல் முன்பல காணு நாணுவா — கண்டலன் மங்கை முனங் கையர் கும்பிடு காலாய் மேலாய, சந்த மலிந்த குடந்தையி ளங்கிளி தாலோ தாலேலோ — சங்களை யுங்கா மங்கள நாயகி தாலோ தாலேலோ. (9)

வேறு.

மணந்த வார்குழல் வெண்பிறை சூடுமை தாலோ தாலேலோ — வடிந்த காதிரு செங்கதிர் சேர்பரை தாலோ தாலேலோ,

தணந்த காமியர் தந்துணை யாமளி தாலோ தாலேலோ — தவஞ்செ யாவெனை யுந்தனி யாள்கொடி தாலோ தாலேலோ, நிணந்த யோகியர் சிந்தைய ருவொளி தாலோ தாலேலோ—நிவந்த ஆருயிர் உய்ந்திட மேவனை தாலோ தாலேலோ, குணந்த வாதவர் புங்களை மாநிதி ரலோ தாலேலோ — குடந்தை வாழ்வெனும் மங்கள நாயகி தாலோ தாலேலோ. (10)

மூன்றுவது தாலப்பருவம் முற்றிற்று.

## 4. சப்பாணிப்பருவம்.

வீங்கும் சுவைச்செங் கழைச்சிலை குழைத்தளி வீராயநா ணம்பொருத்தி — விரைமலர்க் கோலேந்து கொண்டொரு மலர்க் கோல் விரைந்தவிட் டவனுடம்பு, தேங்கும் தழற்குணவு செய்து பண் டைப்படி திருந்தியோ கத்திருந்த — செஞ்சடைக் கருமிடற் றுத்தவன நீற்றுத் திருப்பெரும் பரமயோகி, வாங்குந் திரைகடற் புடவிமுதல் எத்தலமும் வாழ்வெனும் புணரிமூழ்க — வணங்கா முடித்தலை வணங்கிட வணக்குகழை வண்சிலையும் மலர்வாளியும், தாங்குந் திருக்கைத் தலத்தொளி துளும்பவொரு சப்பாணி கொட்டியருளே — தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (1)

ஆக்கும் தொழிற்றமரு கம்புரக் குந்தொழில் அமைந்தஅப யம்சாம்பரா — அழிக்கும் தொழிற்றீ மறைக்குந் தொழிற்றலை அமைந்தான்று தாள்மறைப்புப், போக்குந் தொழிற்குஞ் சிதத்தா ளிவைந்தம் பொலிந்திடச் சுருதி வாழ்த்தப் — புன்மையின் றுய்ந்தனம் எனச்சகல புவனமும் போற்றெடுத் தேத்தமடமை, நீக்கும் புலிப்பத முனித்தலைவ னும்பணி நெடுந்தவ முனித்தலைவ னும் — நிறைமகிழ் நிளைப்பமா தேவன்மன் றிடைநவில் நிருத்தக் கியைந்ததானம், தாக்கும் திருக்கைத் தலத்தொளி துளும்பவொரு சப்பாணி கொட்டியருளே — தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (2)

ஒங்கிய கொடைத்தலைமை பூண்டமை இரும்புவனம் உணாவறி குறியமைந்தாங் – குத்தமோத் தமநீர் பொழிந்தெய் வப்பசுவின் ஒண்முலையின் விரல்கள் வாய்ந்து, தூங்கிய மதப்பொழி மலர்க்கற் பகத்தில் தழைந்தளிரின் இயல்புபூண்டு – தங்கமிகு சங்கமும் பதுமமும் இரேகையிற் றேற்றப் புனைந்துகொண்டு, வீங்கிய சுடர்ப் பிழம் பாற்றணங் கறன்முழுதம் வெய்துவாய்ப் பெய்து தோன்றும் வெய்யோன் சமழ்க்குமணி ஆழிகள் புனைந்துமழை மேகமுதலாய பலவும். தாங்கிய திருக்கைத் தலத்தொளி தளும்பவொரு சப் பாணி கொட்டியருளே – தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (3)

புண்ணியம் மலிந்தவர் அகக்கணு முகக்கணும் பொங்குகளி தங்குமாறு – பொன்னஞ் சிலம்புபுனை தாமரை இயங்குகாற் புண்டரிக மலரகத்தும், கண்ணிய செழுங்கோக நகமல ரகத்தும் கலந்தமர் நலந்தண்மடவார் – கைக்கமல மிசைவசிக் குங்கமல மலராய்க் கடற்றுனை சுற்றுபுடவி, அண்ணிய பிலம்புக் கழுந்தப் பாந்தநீர்க் காயகற் றுயாய்ப்பல – அறங்களுக் குஞ்செவிலி யாய்ப் பொலிந் தச்சமற அபயவா தம்கொடுக்கும், தண்ணிய திருக்கைத் தலத்தொளி தளும்பவொரு சப்பாணி கொட்டியருளே – தண் டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டி யருளே. (4)

மையற் றுறைப்படியும் எங்களை எடுத்தாள வல்லநின் திருவடிக்கு – வந்தனம் பற்பல புரிந்தனம் இனுஞ்செயவு வந்தனம் அதான்று போற்று, கையற் றிருக்குமடர் கூட்டத் தொருதுநிற் கருதனை யும்பரசுவோம் – கங்கையை நினக்கடிமை என்றுசா தித்தளவில் கலையெடுத் தப்புகலுவோம், பையற் றெடுங்குமொரு பாம்பினம் பொறியறப் பாவைநினை யேகருதுவோம் – பாடித் துதித்திடவும் எங்கட்கு நீஇனிப் பண்ணுவது நிற்கஇன்றுன்' தையற் றிருக்கைத் தலத்தொளி தளும்பவொரு சப்பாணி கொட்டியருளே – தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (5)

வேறு.

வழிவழி அடிமை எமைக்கொண் டாளும் மருக்கரு ணைத்தி ருவே – மாயா மயகும் பத்து முளைத்தவர் வாமத் தமருமையே, கழிமகிழ் சால நினைப்பவர் உள்ளக் கமலத் துறையனமே – கல்லா மூடர் மதிக்கும் இனித்துக் கமழும் பைந்தேனே, பழிதபு மறை முறை யிடவும் அதற்கப் பாலா கியகொடியே – பனிவரை ஆற்று தவத்தின் முளைத்த பசுங்கிளி யேமயிலே, கொழியருள் வடிவுடை மங்கள நாயகி கொட்டுக சப்பாணி – குடந்தையுள் மேய மடந்தை பராபரை கொட்டுக சப்பாணி. (6)

ஆலம் பொலிதரு கண்டத் தெண்டோள் ஆண்டகை எம் பெருமாற் – கைந்தொழி லும்முடன் மேவி யிருந்தினி தாக முடித்திடுவோய், ஞாலம் பொலிதரும் ஆருயி ராய நலங்கெழு பைங்கூழ்கள் – நன்று விழைந்து தழைந்து பொலிந்திட நக்கெழு பசுமுகிலே, சீலம் பொலிதரு செய்கையி னுள்ளத் திருகற் றுருகிடு வார் – செறிதரு சனனப் பரவை சுவற்றும் செங்கதி ரேயளவாக், கோலம் பொலிதரு மங்கள நாயகி கொட்டுக சப்பாணி – குடந்தை யுள் மேய மடந்தை பராபரை கொட்டுக சப்பாணி. (7)

கரையில தாகிய பரமா னந்தக் கடல்வரு தெள்ளமுதே – கருதிக் கருதி மிகக்குழை வாருட் கழனி எழுங்கழையே, வரையி னுதித்தோர் மருப்புக் கன்றை வயக்கு மடப்பிடியே – மாறில் அவித்தை இருட்டற அன்பருள் மாமலை யெழுகதிரே, தரைமுதல் பூத்தருள் நன்று பழுத்துத் தழையும் பொற்கொடியே – தானே யாகிய தோன்றுத் துணைமகிழ் தக்க பெருந்துணையே, குரைமறை ஒலிடும் மங்கள நாயகி கொட்டுக சப்பாணி – குடந்தையுள் மேய மடந்தை பராபரை கொட்டுக சப்பாணி. (8)

வேறு.

மடமற நினைபவர் உளமெனும் ஒருதனி உற்றவிளக்கே சொல் – மறைமுடி விறுமுணர் வருமொரு முதல்விய ருட்பெரு

மைத்தேவி, தடநெடு முடியுயர் பனிவரை இமையமு யிர்த்தமடப் பாவை – தளர்வற அளவில்பல் உயிர்களும் எளிதின ளித்ததிறற் கோதை, படவர வழுமதி யழும்வா நதியுமு டித்தசடைத்தேவர் – படுமத சலவிறல் அடுகளி றுதவுரி பெற்ற புகழ்த்தூயர், குடநடு வமர்பவர் இடமமர் மடமயில் கொட்டுக சப்பாணி – குவலயம் விழை வன விழைவகை அருள்பரை கொட்டுக சப்பாணி. (9)

பொன்பொலி பாதம் மறந்தலே யாவொரு புக்கில மைத்தறி யாப் – புன்புலே யேழும் விரும்பிடு மாறருள் புத்தமு தப்பாகே, மின்பொலி வேணியர் பங்கமர் வாய்திரு மெய்த்த அருட்பேறே – இன்பொலி யாவர்க ளுந்தொழ வாழ்வருள் விச்சை அனப்பேடே, தென்பொலி சீதரன் முன்பிற வாதசெ ழித்தசு வைத்தேனே – திங்களே நேர்முக மங்கதின் மானிகர் செப்புவி ழித்தாயே, கொன் பொலி ஞாலம் மலர்ந்த பராபரை கொட்டுக சப்பாணி – கொங்களே வார்குழல் மங்கள நாயகி கொட்டுக சப்பாணி. (10)

**நான்காவது சப்பாணிப் பருவம் முற்றிற்று.**

---

## 5. முத்தப்பருவம்.

சுரும்பு செறியும் நாண்பூட்டித் தோகைக் கருப்புச் சிலே கோட்டித், தோலா மரகைத் திறம்காட்டிச் சுதைத்தேங் கணே யொன் றுறக்கூட்டி, அரும்பு செருக்கிற் றெடுத்தான்மெய் அடலே புரிகண் ணுதற் பெருமான் – அங்கங் குளிர்ந்துள் உருகவவன் ஐந்து ளொன்று விகசிக்க, விரும்பும் அதனுள் மற்றென்று விட மும் அமுதம் எழுவிக்க – விழைமற் றென்றை நகைமுகமா விண்ணே ருணவும் விளர்த்தி டுஞ்சொற், கரும்பு கலந்து வெளிப் படுக்கும் கனிவாய் முத்தம் தருகவே – கருணை காமங் களவல்லி கனிவாய் முத்தம் தருகவே. (1)

தோட்டு மலரா சனத்தமரும் தோன்றற் பிரமன் முதலாகச் — சொற்ற அமரர் பெருங்குழுவும் சொலுமற் றுளமன் பனைத் தொகையும், வாட்டும் உயிரென் றுள்நடுங்கி வருந்தக் கனகன் உடல்கீண்டு — வரும்செந் நீருண் டுறுவெறியால் வருத்தும் மடங்கல் உயிர்சாம்பப், பாட்டு மறைவாழ்த் திடஎண்காற் பறவை ஆய சகோரம்விழை — பண்பிற் கவர்ந்து மகிழ்தூங்கப் பற்பல் உயிர்க்கும் இன்பகலம், காட்டும் முறுவல் நிலவரும்பும் கனிவாய் முத்தம் தருகவே — கருணை காமங் களவல்லி கனிவாய் முத்தம் தருகவே. (2)

வண்ணக் குழவி வடிவாய்முன் மகிழ்ந்து கவர்ந்த காரணத்தால் — வானம் பரவும் மலையரசன் மனைவி மேனை முலைப்பாலும், சுண்ணப் பொடிசால் புயமலயத் தவசன் மனைவி பொன்மாலை — தணைத்றப் பணைத்த முலைப்பாலும் சுடர்வேற் குழவி தனைஎடுத்து, நண்ணக் குளிர்முத் தண்டுவந்து நருகா ரணத்தால் அறுமாதர் — நலங்கொள் முத்த முலைப்பாலும் ஞான மயநின் முலைப்பாலும், கண்ணக் கலந்து பரிமளிக்கும் கனிவாய் முத்தம் தருகவே — கருணை காமங் களவல்லி கனிவாய் முத்தம் தருகவே. (3)

ஆணைத் திருக்கை இவருளமென் றறைய நின்றார் அகங்கைநீர் — ஆட்டி னூர்பச் சிலையிட்டார் ஆதலான்மற் றிவரின்னே, மாணைத் திருக்கை பயில்வேலா வலயப் புவிமன் னவராக — வானோராக அரசாக மலரோ னாக மாலாக, ஏணைத் திருக்கை ஒழித்தமர்வார் இவர்சா லோக முதலியவைக் — கிறைவராக விரைந்தருடி எம்மானேமற் றெல்லாரும், காணைத் திருக்கை சாத்தென்றும் கனிவாய் முத்தம் தருகவே — கருணை காமங் களவல்லி கனிவாய் முத்தம் தருகவே. (4)

மதிக்கும் சுவைத்தீம் பால்சுரந்து வடித்த கழைச்சா றவட்டெடுத்த — மதாம் பொதிகோற் றேன்பொதிந்து மாறா தினிக்கும் பாகூறி, உதிக்கும் மணியாழ் ஓசையளாய் உவக்கும் குயிற்கூக் குரல்விரவி — உரைசெய்கிள்ளைக் கிளவிபயின் றறவேய்ங் குழலின்

ஒலியமைந்து, திதிக்கும் ஒருமுக் கனிபழுத்துத் திகழும் புல்ல கண்டமுற்றுச் – செறிகற் கண்டு விளைந்தெழுந்து தெய்வம் கமழும் அமிழ்தரும்பிக், கதிக்கும் தமிழும் மணந்துபொலி கனிவாய் முத்தம் தருகவே – கருணை காமங் களவல்லி கனிவாய் முத்தம் தருகவே. (5)

வேறு.

வண்பார் விரும்பும் கரும்பும் சுரும்புமிடை வாவிச் செழுங் கமலமும் – வானவர் இருக்கையைத் தோயும்வே யும்புகல் வாம் பையில் அரம்பையும்மிகு, நண்பார் பசுங்கமுகும் நாடுபுகழ் செந்நெலும் நலங்கூர் நினக்குநினது – நாதற்கு நீழலும் அருச்சனைக் குபகாண நன்பொருளும் ஆகும்எனினும், கண்பார் நினக்கு மாற்றுள்எனும் புனலுருக் காரிகையொ டளவளாவிக் – களிதூங்க லாலவை உதித்தமுத் தங்கொளேம் கடவுளர் ஒருங்கவாவும், பண்பார் குடந்தைப் பெருந்திரு நகர்க்காசு பவளமுத் தந்தருகவே – பாவுமந் திரபீடம் விரவுமங் களவல்லி பவளமுத் தந்தருகவே. (6)

காராய் கருங்கடற் குட்டம்வட வைத்தீக் கலப்பின்வெப் புற்றதின்னும் – கழியா உவர்ப்பும் புலாலும் செறிந்ததக் கடைபடு கடற்குட்டமே, ஓரா யெனக்கொண் டுதித்தவளை இப்பிநெட் டுடலவன் மீன மீனம் – உவையாதி தருமுத்தம் எவ்வுயர்வை உற்றதெவ் வுவகையை எமக்காக்கிடும், போராய் மருப்புப் பொருப்பெறுழி வெங்கான் பொருந்தியுழல் கின்றதிறனல் – புகர்பட்ட அன்னவை உறுப்பின்முத் தங்களுமோர் பொருளென மதித்தல் செய்யேம், பாராய் குடந்தைப் பெருந்திரு நகர்க்காசி பவளமுத் தந்தருகவே – பாவுமந் திரபீடம் விரவுமங் களவல்லி பவளமுத் தந்தருகவே. (7)

நீடும் சிறப்பிற் பொலிந்தஅவி முத்தமிகு நேயத்தளித்த போது – நிகழத னிறும்கோடி பங்கதிக மாயென்றும் நிலவுமித் தலமுத்தமுற், கூடும் தவத்திற் கிடைத்தமரும் யாங்களது கொள்ளேம் விரும்பியதுவே – கொடுத்தருளல் நின்திரு வருட்கழகு

நெக்குருகு கொள்கையரு ளக்கோயில்கொண், டாடும்பிரா னெடும் அமர்ந் தருள்விளக்கே அலங்குமறை முடியென்னுமோர் – ஆவியின் உலாவுபெடை அன்னமே முன்னரும் அனைத்துநூ லுந்தெரிந் தோர், பாடும் குடந்தைத் திருப்பெரு நகர்க்கரசி பவளமுத் தந்தருகவே – பாவுமந் திரபீடம் விரவுமங் களவல்லி பவளமுத் தந்தருகவே. (8)

வேறு.

நன்று கருதும் அன்பர் இதய கஞ்ச மருவு சத்தியே – நம்பு மறையின் உம்பர் இலகு தங்க விமல தத்தையே, கன்று பிறவி நந்து திருவர் சிந்தை குலவு வித்தையே – கந்தர் தருவின் ஐங்கை முதல்வர் மைந்தர் எனவ ணைத்துளாய், ஒன்று புகலி அந்தண் மழவும் உந்த அருள்ப யத்தியே – உம்பல் இறைமுன் நந்து சுரர்கள் முந்து தொழுப தத்தியே, குன்று மகிழ வந்த கருணை அம்பை தருக முத்தமே – கும்ப முதல்வர் பங்கின் அமரும் மங்கை தருக முத்தமே. (9)

கரிய முகிலின் அளகம் இருள்செய் கவுரி தருக முத்தமே – கருதி யுருகும் அடியர்இதய கமலை தருக முத்தமே, அரிய கருணை பொழியும் நயன அமலை தருக முத்தமே – அழகு பொழியும் வதன பதும அபிமை தருக முத்தமே, புரிய இனிய இமயம் உதவு புதல்வி தருக முத்தமே – பொருவில் கருணை யுருவம் மருவு புனிதை தருக முத்தமே, துரிய முடிவில் வெளியின் மருவு சுமுகி தருக முத்தமே – சுவைய அமுத கலச முதல்வர் துணைவி தருக முத்தமே. (10)

ஐந்தாவது முத்தப்பருவம் முற்றிற்று.

---

## 6. வாரானைப்பருவம்.

தேனளா வுங்குழற் சடையலங் காரத் திருப்பணியும் இருள் விழுங்கித் – திகழ்மணிப் பிறையுமொளி உமிழ்மணித் தோடும் வளர் செஞ்ஞாயி றுதயம்செய, மீனளா வும்கடற் றாளமா லிகையு மொளி மிளிர்குமிழ் விராயமுத்தும் – வெள்வயிர கடகசு டகமதா ணியுமுவவு வெண்டிங்கள் உதயம்செயக், கானளா வுந் தாட் சிலம்பும் சதங்கையம் கலகல எனக்கலிப்பக் – கனகமணி மேகலை புலம்பமறை ஒலிடக் கடவுளர்கள் வாழ்த்தெடுப்ப, வானளா வும்பதண மதிழ்சூழ் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே – மன் னுயிர்ப் பயிரொலாம் தழையஅருள் மழைபொழியும் மங்களாம் பிகை வருகவே. (1)

கண்டோர் பவத்துன்பு காணுர்க ளாய்ப்பெருங் களியார் கலிக்கண் மூழ்கிக் – கற்பகப் பனிமலர் இறைத்தெதிர் இறைஞ் சிவான் கடவுளர்கள் எதிர்நடப்பப், பண்டோர் மறைக்குழவி உண்ணமெய்ஞ் ஞானவின் பாலருள் பிராட்டிவந்தாள் – பார் பெறச் சுவணரோ மற்குமா றஞ்சுவாட் படையருள்கல் யாணி வந்தாள், திண்டோள் வலிச்சிலம் பாசன் தவத்துவரு செல்வக் குமாரிவந்தாள் – செகமுழுதம் ஈன்றதாய் வந்தாள் எனத்திருச் சின்னங்கள் ஆர்ப்பெடுப்ப, வண்டோ லிடும்பொழில் உடுத்தொளிர் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே – மன்னுயிர்ப் பயிரெலாம் தழையவருள் மழைபொழியும் மங்களாம் பிகைவருகவே. (2)

ஒளியார் கருங்களச் செம்மேனி வெண்ணீ றுவந்தமா தேவ னெம்மான் – ஊடலொழி யப்பணி தொறுஞ் சடிலம் வாழ்நில வொருக்கள வளாவலானும், களியார் கருங்கணஞ் செய்யவாய் வெண்ணகைக் காமரா மாதர்பலரும் – கனிவின்எண் ணியபெறப் பணிதோறும் அவர்குழற் காரிருள் அளாவலானும், அளியார் பெரு ம்பனி வளைப்பயிற லானுமோர் அணுவளவும் வாட்டமடையா – அம்போ ருகத்துணை பெயர்த்துமறை வாழ்த்தொலி அளாவியெங்

கும்பாப்ப, வளியார் பெரும்புவனம் ஏத்தும் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே – மன்னுயிர்ப் பயிரெலாம் தழையவருள் மழைபொழியும் மங்களாம்பிகை வருகவே. (3)

பாடுவார் ஆணவம தென்னுமிரு கந்தபப் பாய்கின்ற புண்டரீகம் – பரவுவினை யாயவிரு காடுமுழு துந்தபப் பதிதரும் செய்யமுளரி, நீடுவார் மாயையென நிகழ்கதிர் நிலாவிதழ் நிரம்பிய செழுந்தாமரை – நீங்காத சேருய இம்மூன்றும் ஒழிதர நிலாவுமரவிந்தமென்று, கூடுவார் மறைபல எடுத்தியம் புங்கனக கோகனக மலர்பெயர்த்துக் – கொண்டாடும் எம்மைவழி வழியடிமை கொண்டு கதி கூட்டுவதும் உண்மையென்னின், மாடுவார் கொடியாடு மாடக் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே – மன்னுயிர்ப் பயிரெலாம் தழையவருள் மழைபொழியும் மங்களாம் பிகைவருகவே. (4)

விள்ளற் கருஞ்செயலின் உருகியுரு கித்துதிசெய் வித்தகத் தவர்இம்மையே – மேலாய கல்வியும் செல்வமும் ஒருங்குபெற விழைவிற் கொடுத்தல் கருதி, அள்ளற் றலைப்படும் கமலத் தலைப்பொலியும் அங்கலார் இருவர்கையும் – அறங்கள்பல வுங்குடிகொள் அங்கையிற் பற்றலுற் றுங்கமை தரப்பற்றியே, எள்ளற் றிறம்சிறிதும் இல்லாத மறைமுடியும் எங்களுள முங்குடிகொளும் – எழில்கனிந் தொழுகுசிற் றடிமலர் பெயர்த்துவகை எண்ணில்புவ னத்துமேவ, வள்ளற் பெருந்தகையர் பொலியும் குடந்தைநகர் வாழ்வாயபரை வருகவே – மன்னுயிர்ப் பயிரெலாம் தழையவருள் மழைபொழியும் மங்களாம் பிகைவருகவே. (5)

வேறு.

வானதோய் சுதரி சனப்படையான் ஒருமா வுருக்கொண் டெம்பர்பிரான்—உபய பதமும் காண்பான்புக் கொன்று ங்காணுள் தொழிதந்து, மீன்தோய் பாவைப் புடைவிழுந்தான் விரும்பி இவளிற் றடிதொடரின் – விழைந்து முயன்ற முடிகாணல் மேவும் மேவா விடினுமிவள், தேன்தோய் மலர்த்தாள் தொடர்பொன்றே

திருந்தும் எனவுட் கொடுமலர்மேல் — திகழோ திமம்மென் னடை கற்பான் செறியோ திமங்க ளொடுந்தொடா, வான்தோய் இமய வரைப் பிறந்த வனிதாய் வருக வருகவே — மறைவாழ்த் தொலி சால் திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (6)

உதிக்கும் உடம்பை யேயாமென் றுள்ளி வினைநா டொறும் உஞற்றி — ஒரைந் தவத்தை களினுழிதந் தொழியும் பொறியில் ஆன்மாயாங்களும்மெய், பதிக்கும் கருணைப் பாவையிடைப் படிந்து தளையக் கடைக்கணித்த — பரமா னந்தத் திருவுருவப் பாவாய் புகழ்ந்து பாடுநர்பால், விதிக்கும் அயனு தியரிடத்து விரவ விடுக்கும் கருணையினும் — மேலாம் கருணை விடுத்தளிக்கும் விமலாய் விண் ணேர் ஆதியருள், மதிக்கும் இமய வரைப்பிறந்த வனிதாய் வருக வருகவே — மறைவாழ்த் தொலிசால் திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (7)

இழியும் தொழிலில் புகுத்தமல இருட்டும் விளர்க்கும் கருங் குழலும் — எழில்கொப் புளிக்கும் திருமுகமும் இருகை உதித்த பெருவெள்ளம், கழியும் திவலை யாயொடுங்கக் கச்ச மில்லா அருள் வெள்ளம் — கதிக்கப் பொழியும் கடைக்கண்ணும் கருது ஞானம் பொழிதனமும், பழியும் மறமும் கடந்தன்பர் பற்றத் தகுமோர் பற்றுய — பாதாம் புயமும் மிகப்பொலிந்து பரவப் பரவு வெள்ள ருவி, வழியும் இமய வரைப்பிறந்த வனிதாய் வருக வருகவே — மறைவாழ்த் தொலிசால் திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (8)

அஞ்சார் புரங்கள் ஒருமூன்றும் அழலோன் உண்டு தேக் கெறிய — அரும்பு சிறுவெண் ணகைபுரிந்த அபிற் குடலா திகளா வாய், விஞ்சா ரணைய பெருமாற்கு மேவி யுடன்நீங் காதமர்ந்து — விதித்தலாதி ஐந்தொழிலும் விரும்பின் முடிக்கும் திறற்பாவாய், பஞ்சார் அடியிற் சிறுசிலம்பும் பாதசாலம் எனும்பிறவும் — பற்று அரையின் மேகலையும் பண்டை மறையாக் கொண்டணிவாய், மஞ்சார் இமய வரைப்பிறந்த வனிதாய் வருக வருகவே — மறை வாழ்த் தொலிசால் திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (9)

தானே தனக்குச் சரியாய தாயே வருக உரைக்கவினை – தடிவாய் வருக நினைக்கமுத்தி தருவாய் வருக மலர்பொதிந்த, கானே புரையும் கருங்கூந்தற் கவுரி வருக மெய்ஞ்ஞானக் – கரும்பே வருக அருள்பழுத்த கனியே வருக தெவிட்டாத, தேனே வருக ஆனந்தத் திருவே வருக பெருவேதச் செல்வீ வருக எங்கள் குலதெய்வம் வருக உருகுநர்உள், மானே வருக இமயவரை வனிதாய் வருக வருகவே – மறைவாழ்த் தொலிசால் திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (10)

ஆறுவது வாரானைப்பருவம் முற்றிற்று.

---

## 7. அம்புலிப்பருவம்.

நீடுசுப மங்கைஎனல் தன்னியற் பெயராலும் நிறுவி இவள் பொலிவள் நீயும் – நிலவும் சுபக்கிரகம் என்றுரை செயப்பொலிவை நிகழ்கின்ற சமயம் ஆறும், கூடுமிட மாகக் குறித்தமர்வள் இவள் பெருங் கும்பமுற் கடகம்வரையும் – கூடிய இராசியோர் ஆறமமர் இடமெனக் கொண்டமர்வை நீயும் மடமை, சாடுநர்கள் பெண்ணாசியாயபெண் என்னஇவள் தழைவள்பெண் கிரகமென்னத் – தழைவை நீயும் தெரியின் ஒப்பாகல் உண்மையுயர் தவளமாடக் கொடிகள்மேல், ஆடுகுட மூக்கெங்கள் மங்களாம் பிகை யுடன் அம்புலீ ஆடவாவே – அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (1)

பாயநற வம்பொழியும் ஆம்பலை உவட்பைநீ பற்பல்பம ரங்கள் மூசப் – பாவுதா னம்பொழியும் ஒருமருப் பாம்பலைப் பண்புற உவப்பாளிவள், மேயபல கமலமும் முகங்கவிழ் தாப்பொலி வியன்காம் கொண்டு ளாய்நீ – விளம்புமக் கமலங்கள் நாணினவ் வாறும் வியன்காம் கொண்டாளிவள், தோயம்மலி கடலகசம் உதித்துளாய் நீபாசுகக்கடல் உதித்தாளிவள் – சொல்லுமிவை தேரிலொப் பாகாதிராய்வளமை தொக்கவள காபுரியின்மிக், காயகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆடவாவே – அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (2)

என்றவொரு கும்பமுளை நீயுண்மை ஞானநிறை இருகும்பம் உள்ளாளிவள் — இயலுமொரு மீனமுளை நீகருணை வெள்ளம்நிறை இருமீனம் உள்ளாளிவள், சான்றவோர் எற்றினன் நீதரும மாலெனத் தக்கவீ ரேற்ருளிவள் — தங்குகற் கடகமொன் றுடையன்நீ இருளறச் சாடுகற் கடகம்நாளும், தோன்றவொர் இரண்டுடையள் இவள்இன்ன திறலுடைத் தோகைநிற் கதிகமென்று — சொல்ல வேண்டுங்கொலோ வாவென்றழைத்தது சொலிற்கருணை யேவளத்தால், ஆன்றகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆடவாவே — அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொடம்புலீ ஆடவாவே. (3)

நிற்குரிய கும்பமொரு முடவன்விழை குவனிந்த நேரிழைக் குரியகும்பம் — நெடுமறை முடிக்குமெட் டாதவொரு கும்பேச நிமலப் பிரான்விழைகுவன், சொற்குலவு நிற்குரிய வேறுபுகர் கொள்ளத்தொலைத்தனை இவட்குரியவை — தங்கமுற் றெத்தகைய வானவரும் எத்தித் தொழப்பொலிவ எந்த ஞான்றும், விற்குலவு நின்மீன் விரும்புமொரு பொன்னிவள் விசாலமீன் கடையை மண்ணும் — விண்ணும்விழை யும்இவள் நினக்கதிகம் என்பதால் விளைவதொன் றில்லை என்றும், அற்குகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆடவாவே — அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (4)

செய்யகதிர் ஆயிரம் விரித்திருள் அரித்துவரு செம்மல்நின்னேடொத்தவன் — திண்ணிய மடங்கலை விரும்பிய துணைந்துநீ சேற்றுநில மாக்கள் போல, நொய்யசி றலவனை விரும்பியப் பெயர்பூண்டு நோக்குரு குழல்வை சீயம் — நோன்மையின் உதித்திடும் போதமத யானைவலி நூறிச் செருக்குஞெண்டு, வெய்யதாயனையுயிர் அழித்தனைக் குள்ளொளியும் விழுமிய துணர்ந்தாய் கொலோ — வீபத் தெனும்பெயர் முதற்குறுகல் அடையாது மேலாய சார்பு கோடற், கையகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆடவாவே அலகில் பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (5)

தெரியவொரு கோளுண் டுமிழ்ந்திடப் பட்டும் சிறந்தவா சாற் பிழைத்தநத் – நியவெஞ் சாபத் தொடக்குண்டு மோகம் செறிக்கு மல ரான்சாபமே, உரியதென எற்குமொரு கோட்டும்பல் நால்வாய் உறுத்தசா பத்தொடக்குண் – டுழிதந்து மொழிதந்து நேர்தரு மருக்குலார் ஒள்ளணிகொள் ளெள்ளல் மேவி, விரியஎரு விட்டெ றிய வெளிவந்து நியுறுதல் மேதகைய இவளுணர்ந்து – மெய்ம்மை யுண ராளின்உனை ஆடவா எனவிளித் தனள்விழை அறஞ்செயா ருக், கரியகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆட வாவே – அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம் புலீ ஆடவாவே. (6)

எடுத்தவெஞ் சினஅனல் கனன்றெழப் பொன்வேதப் பேறி நிற் சட்டகாலே – இத்தலச் சோமேச நீர்படிந் தனுகூலம் எய்திய தயர்த்தனாயோ, விடுத்தபெரு விதியினுன் பக்கபா தஞ்செயல் விடுத்திலன் எனச்சிறுவிதி – வெகுளத் தொடர்ந்தநோய் இத்தளி யுன் மேயநீர் விட்டியதும் உட்கொண்டிலாய், தடுத்தபொறி யாளர் செறி இத்தல மகத்துவம் சற்றுமுண ராதவன்போல் – தாமதம் செயல்தக்க தன்றுபகை வென்றுமிளிர் தருதவசம் வானுலகமீ, தடுத்தகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆடவா வே – அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (7)

சாற்றொரு தலம்செய்த பாதகம் விசேடத் தலத்திடையின் மாயும் அந்தத் – தலத்துப் புரிந்தபா தகமிருங் காசித் தலத்தினைச் சார மாயும், போற்றுமக் காசியில் செய்தமா பாவம்இப் புண்ணிய தலத்தமேவப் – போமென உரைக்கும் புராணமத் தகையவிப் பொருவாத் தலத்தையுற்றுத், தோற்றுமா மகநீர் தனைத்துபொற் றுமரைத் தோயமும் தோய்ந்தம்மைபொற் – றிணையடி வணங்கிநீ பெறுமிவா பத்தளவு சொல்லவல் லவாார்பொறை, ஆற்றுகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆடவாவே – அல கில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (8)

துலங்குதன் திருவடிக் கன்புபுரி அதிதிமுற் றேன்றப் புகன்றசாபத் – தொடக்குண்ட காசிபன் மிகும்புனற் காவிரித் துறையிற் படிந்தெழுந்து, கலங்குதலி லாததவம் ஆற்றமற் றவ னுளம் களிகொளும் காட்சி நல்கிக் – கவற்றிய வலித்தன்மை யுந் தொலைத் தருள்செய்த கருணைப் பிராட்டிஇவளால், மலங்குமன னேடவ மதித்தசிறு விதிசொற்ற வலியசா பத்தொடக்கால் – மாறிமா றிக்குறைதல் தீர்ந்துநீ உயஅருள் வழங்குவாள் எனல் வேண்டுமோ, அலங்குகுட மூக்கெங்கள் மங்களாம் பிகையுடன் அம்புலீ ஆடவாவே – அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (9)

பொருள்செயிவள் வாவென்று திருவாய் மலர்ந்தவப் பொழு தும்நீ வந்தாயிலை – பொலியும்நின் முகத்தெதிர்ப் படஅஞ்சு னன் எனப் போதஉரை செய்து காத்தேம். ருெதள்செய்இவள் இன்னும் வந் திலன் எனச் சிறிதுகண் சேந்திடில் புவனத்துளோர் – திக்கிலை நினைக்கஞ்சல் என்பாரும் இலைஇவள் சினம்தவிர்ப் பாரும்இல்லை, வெருள்செய்பணி பலவுளொன்றிவள் கொழுநன் ஏவிடின் விழுங் கியே விடும் அரைத்த–வீரனும் உளான்இவை உணர்ந்துய்ய வேண் டிடின் விரைந்துவந் தடியர்யார்க்கும், அருள்செய்குட மூக்கெங்கள் மங்களாம்பிகையுடன் அம்புலீ ஆடவாவே – அலகில்பல புவனமும் உயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ ஆடவாவே. (10)

ஏழாவது அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

## 8 அம்மானைப்பருவம்.

ஒளிதங்கு திருநுதற் பகையாகி மாற்றவளொடுங்கூடி யும்பர் பெருமான்–ஒண்முடியின் அமர்பிறையை நம்பாக வழியாய தோர்ந் தயர்த் தனமாயினும், களிதங்கு தோழியர் இருக்கையை அழித் திடக் கண்டிரோம் என்றுபற்றிக் – கலைமதியினைப்பிசைந் துண்டை பல செய்துமேற் காணஎறி வதுகடுப்பத், துளிதங்கு மறிதிரை

நெருக்கும் கருக்கடற் றெடுகுழி யிடைப்பிறந்து — தூயபல கழுநீர்
அரும்புமுகை அவிழத் தலங்குவெண் ணிலவுவீசி, அளிதங்கு குண
ளமையும் முத்திட் டிழைத்ததிரு அம்மானை ஆடியருளே — ஆரண
முழங்கும் குடந்தைமங் களவல்லி அம்மானை ஆடியருளே. (1)

தலங்குபனி வரையாய எந்தைமாற் றலன்எனத் தோன்றும்
பெரும்பிழையைநம் — தோழியர் மனைக்குதவி செய்குணம் உணர்ந்
தனம் தொக அமைத் தனமாயினும், இலங்குகரு மச்சான் றெனப்
பொலிந் தம்பானை எண்ணு திகழ்ந்த ஒருவன் — இயற்றுகரு மக்க
ளம் புக்க பிழை ஆற்றேம் எனப்பிசைந் தண்டைசெய்து, மலங்கு
தல் கொளப்பரிதி தனைமேல் எடுத்தெறிதல் மானஉத யப்பொருப்
பின் — வழசெம்மை அருவியின் உகம்பல அழுந்தியொளி மாட்சிமிக்
குற்றமேன்மேல். அலங்குசெங் கதிர்வீசும் மணியிட் டிழைத்ததிரு
அம்மானை ஆடியருளே — ஆரண முழங்கும் குடந்தைமங் களவல்லி
அம்மானை ஆடியருளே. (2)

மலர்செறி கருக்குழற் பகையாய பிழைநமை மதிக்கும் அடி
யாரகத்து — மன்னு தொழிந்து மதியாருட் செறிந்திடல் மதித்த
யர்த் தனமாயினும், உலர்தலில் வினோதத்தின் உம்பர்நா யகன்
முகத்தருவிழி புதைத்த நாளில் — உயிர்கள்நித் தியமாதி ஒழிதா
நமக்குமாங் கொழியாத பழிவிராவக், கலர்தொழிலின் அணுகிய
தனம்பொறேம் என்றவெங் காரிருளை உண்டைசெய்து — கதிர
வன் கூட்டுண்டு தேக்கெறிபு மாறமேல் கடுகவிட் டெறிதல் எய்ப்ப,
அலர்விலிந் திரநீலமணியிட் டிழைத்ததிரு அம்மானை ஆடியருளே —
ஆரண முழங்கும் குடந்தைமங் களவல்லி அம்மானை ஆடி
யருளே. (3)

எண்ணிய பசுங்கிரணம் வீசுமர கதமிட்டிழைத்தது மிசைச்
செலுத்தி — இலகுற அதன்கிழக்கிற்கமல ராகத் திழைத்தது
செலச் செலுத்தி, நண்ணிய அதன்கிழக் கொளிவயிரம் ஆற்றிய
நலத்தது செலச்செலுத்தி — நாடிய அதன்கிழக் கோங்குசெம்
பொன்செய்த நல்லது செலச்செலுத்திப், புண்ணிய மலிந்தநீ ஆடு

திறன் நோக்கினோர் பொங்குகதிர் மண்டலமுதற் – போற்றுமண் டலநான்கும் வரிசையின் இருத்தியது போலுமென் றுவகைபூப்ப, அண்ணிய இடைக்கொடி துவண்டிட எடுத்தெடுத் தம்மானை ஆடியருளே – ஆரண முழங்கும் குடந்தைமங் களவல்லி அம்மானை ஆடியருளே. (4)

ஒள்ளொளிய வயிரத் திழைத்ததை எடுத்துமேல் உயர்தர எறிந்திடும்போழ் – தொருபாதி அறமுழு வதுங்குடிகொளும் செங்கை ஒளிவிராய்ச் சோத்தல்மேவ, நள்ளொளிய மற்றையொரு பாதிநின் திருமேனி நக்கபா சொளிவிராவி – நன்றுபச் சென்ன அதன் அடியொன்றி நினதுவெண் ணகையொளி கலந்ததோற்றம், துள்ளொளிய வெள்விடையின் மீதந்தி வண்ணரொடு துரிசில்பச் சுருவமான – தோகைநீ அடியவர் மகிழ்ந்திடக் காட்சிதரல் துணையுமென் றுலகுவப்ப, வள்ளொளிய வெள்வளை கலிப்பமிசை நோக்கெய்த அம்மானை ஆடியருளே – ஆரண முழங்கும் குடந்தை மங் களவல்லி அம்மானை ஆடியருளே. (5)

வேறு.

சொற்பொலி முன்கை வளைக்குல முழுதும் துள்ளி முழக் கம்எழத் – துடியிடை என்னும் கொடியிடைநொந்து துவண்டெழு தலைமேவ, விற்பொலி முத்தின்இழைத்த தெடுத்து மிசைச்செல வீசிடுகால் – வேல்புரை அங்கட் காரொளி அதன்நடு விரவப் பொலிதோற்றம், முற்பொலி வெள்ளிய மதியமும் அதன்நடு மூசு களங்கமுமாய் – முற்றிய வென்று வியந்து புகழ்ந்தொரு மூவுல கும்போற்ற, அற்பொலி கண்டர் இடத்தம ருங்கொடி ஆடுக அம் மனையே – ஆக்க மிகும்குட மூக்கமர் மங்களை ஆடுக அம் மனையே. (6)

சொல்லமு துந்திரை எறியும் பாவைத் தறையில் தோன்ற முதம் – தொக்கிரு பாலும் இமைத்திலர் நின்று துணைந்திரு கைநீட்ட, வல்லவர் கைக்கும் அகப்படல் இன்றிநின் வண்கைத் தலமுறுவான் வண்பவளத்தின் இயன்ற தெடுத்து மதித்தெறி

யக்கவலா, நல்லநின் அங்கைச் சேயொளி யுந்தொடர் நலமொரு செங்கதிரை —நாடியோர் செவ்வா வுறல்நேரும்என நானில மும் போற்ற, அல்லமர் கண்டர் இடத்தம ருங்கொடி ஆடுக அம் மனையே —ஆக்க மிகும்குட மூக்கமர் மங்களை ஆடுக அம் மனையே. (7)

முத்தம் இழைத்த தெடுத்தெறி யக்கடி மொய்த்த குழற்றலை யொண் — முத்த மணிப்பிறை யிட்ட கதிர்த்த முழுப்பட லைக் கணுறீஇ, ஒத்த கலப்புற உற்பல வக்குழல் உற்ற கறுப்புறமேல் — ஒட்டமிசைப்பொதி வுற்ற திறத்தை உணர்த்தின் வனத்துளவக், கொத்தன் விளர்த்தமெய் உற்றபயக்கடல் குறுகி விடம்தாக்கல் — கொண்டு கறுத்தது நேரும் எனப்பலர் கூறி உவப்பெய்த, அத்தர் குடத்தர் இடத்தம ருங்கிளி ஆடுக அம்மனையே — ஆக்க மிகுங்குட மூக்கமர் மங்களை ஆடுக அம்மனையே. (8)

விம்ம லுருவெகு ளித்தழல் மூண்டு வெருக்கொள எதிர்வந்த — வெய்ய இராவணன் ஓர்கால் கற்பக விடபத் தறையுணவு, நம்மறி வின்மையென் ஆயிற் றென்று நடுங்கியொர் கால்வான — நாட்டுக் குடிகளை துளைந்தனன் மீளவும் நக்கொரு கால்மதியைச், செம்மல் இனன் தனை ஒருகால் தீண்டுபு செத்தோம் எனரிவிறவும் — செங்கை விரற்றலை ஒன்றுற உந்திச் சிறுநகை வாய்த் தோற்றி, அம்மனை ஆடிய ஒருமழ வீன்றவள் ஆடுக அம்மனையே — ஆக்க மிகும்குட மூக்கமர் மங்களை ஆடுக அம்மனையே. (9)

எண்ணுதல் உற்றவர் உள்ளக் கமலம் இருக்கும் அனப்பேடே - எப்பொழு துந்துதி பாடுநர் நாவில் இனிக்கும் பைந்தேனே, கண்ணு தல் பக்கம் இருப்பாய் என்றடி கைதொழு பவர்வாழ்வே — கார்தவ ழும் பனி மால்வரை பெற்ற கருங்கண் மடப்பிடியே, ஒண்ணுதல் வீக்கிய பட்டம்வில் வீச ஒளிக்குழை தோள்வருட — உத்திரி யத் தலை ஆரம் உறழ்ந்திட ஒண்முகம் முத்தம்எழ, அண்ணுதல் உற்றிரு நோக்கமும் மேல்எழ ஆடுக அம்மனையே — ஆக்க மிகுங்குட மூக்க மர் மங்களை ஆடுக அம்மனையே. (10)

எட்டாவது அம்மானைப் பருவம் முற்றிற்று.

---

## 9. நீராடற்பருவம்

தங்குபாற் கடல்நடு எழுந்தபைங் கொடியில்வெண் தாளயா னத்திவர்ந்து – தரைபுகழும் அக்கடற் றிரையெழுந் தழிதரும் தன்மையில் கவரிதள்ளக், கொங்குசால் அக்கடற் சும்மையின் இயக்குழாம் கொண்டலச் சுறஇயம்பக் – குளிருவா மதிமிசை எழுந்தநின் றுலெனக் கோலவெண் குடைநிழற்றத், தெங்குநேர் கொங்கையா மாதர்மொய்த் தென்னவண் சேடியர் குழாங்கள் மொய்ப்பச் – சென்றுகா சிபமுனி தவஞ்செய்தே முற்றெளிச் சிவிகையின் இழிந்து வாசம், பொங்குமே னியின் அப்பி எங்கள்கோ மளவல்லி பொன்னிநீர் ஆடியருளே – புகரில்மந் திரபீட நிகரில் மங்களமாது பொன்னிநீர் ஆடியருளே. (1)

ஒழுகுகுழ லுஞ்சைவ லமும்கணும் கயலும்அழ குற்றமுக மும்கமலமும் – ஒள்ளதா மும்கிடையும் அஞ்செவியும் வள்ளையும் உவக்கும்நகை யும்தாளமும், மழுகுசெவ் வியல்புபொலி வாயுமாம் பலும்ஒளி முகிழ்த்தகள மும்சங்கமும் – முதிராத கொங்கையும் புற்புதமும் உந்தியும் முயங்குசுழியுங்கதிர்ப்பும், மெழுகுவயின் உறு மடிப் பும்திரையும் முக்காலும் மேயகட கமும்வாலும் – விழை யாமை யும்கைவிர லும்களிறும் ஒன்றவெழு வேலையும் பரிமளித் துப், புழுகுமலி தாமுங்கி எங்கள்கோ மளவல்லி பொன்னிநீர் ஆடி யருளே – புகரில்மந் திரபீட நிகரில்மங் களமாது பொன்னிநீர் ஆடியருளே. (2)

மருவுநறு மணமலி கருங்குழலு கும்புனலை மங்குல்நின் றுகு புனல்எனு – வானம் பறந்துதிரி சாதகம் எனும்பெயர் மரீஇயபுள் வாய ணக்க, ஒருவுத லிலாச் செய்ய வாயுமிழ் நறும்புனலை ஒள்ளாக் காம்பல் நின்றும் – உகுமதுப் புனல்எனப் பிரமரக் குலம்என உரைக்கும்புள் யாவும்மொய்ப்ப, வெருவுதலி லாதறம் குடிகொளும் அகங்கைஎறி மென்புனலை அனைய கைம்முன் – விட்டபுனல் என்றனிந் திதைமுதலி யோரென்னும் மெல்லோதி மப்புள் எற்க,

பொருவுதவிர் கருணைகூர்ந் தெங்கள்கோ மளவல்லி பொன்னிநீர் ஆடியருளே — புகரில்மந் திரபீட நிகரில்மங் களமாது பொன்னிநீர் ஆடியருளே. (3)

ஊற்றுசுவை நறவுண்டு வண்டுபல மேலெழ ஒருங்கிதழ் விரிந்த தோற்றம் — உற்றசெந் தாமரை நெருங்குறச் சூழும்வெள் ளோதிமக் குலம்அ மர்தரத், தோற்றம்ஒரு தேத்துநீ புக்குநடு நிற்றல்வான் தொடுகுடுமி மாடம்ஓங்கும் — தொன்மதுரை நகரகம் பூதியணி வேதியர் தொடர்ந்துசுற் றமர நாப்பண், ஆற்றுபுகை மேலெழ வளர்த்தஇணர் படுசெவ் வழற்குழி நடுக்கண் முன்னாள் — அவதரித் தறநின்ற தொக்குமென யாவரும் அறையுமா றங்கண் மேவிப், போற்றுகரு ணைத்திறத் தெங்கள்கோ மளவல்லி பொன்னி நீர் ஆடியருளே — புகரில்மந் திரபீட நிகரில்மங் களமாது பொன் னிநீர் ஆடியருளே. (4)

மலிதரு விரைச்செய்ய சாந்திகுளி மாதர்பலர் மண்ணுவினை நிற்காற்றலால் — மற்றினைய நதிசோணை நதியாகி வெண்முத்தம் வண்கமல ராகமாகி, ஒலிதரு கடிப்புனல் உறப்பாய்ந்த செறுஎலாம் உறவெண்ணெல் செந்நெல் ஆகி — ஒளிர்வெண் கரும்பெலாம் செங் கரும் பாகியுடன் உரைவாணி ஆக்கமாகி, வலிதரு கடற்குட்டம் உற்றபல் வல்லிகளும் வண்பவள வல்லியாகி — மாண்புண்ட ரீகங் கள் கோகநகம் ஆகிமதி மருவுறும் பருதியாகிப், பொலிதர உவப்புற எங்கள்கோ மளவல்லி பொன்னிநீர் ஆடியருளே — புகரில்மந்திரபீட நிகரில்மங் களமாது பொன்னிநீர் ஆடியருளே. (5)

வேறு.

அஞ்சம் இரிய மடப்பிடியும் அஞ்ச நடக்கும் அணிந்திதை முன் — ஆய மடமா தருந்திருமால் அயன்மார்பகமும் தாலமும் போல், கஞ்சம் மருவும் மடவாரும் கருணைத் திருமே னியின்நறி தாய்க் — கவின்ற மஞ்சட் பொடிதிமிர்ந்து கரைத்துவிட்ட புனல் எழுந்த, தஞ்சமில்லாக் கருங்கடல்மேற் சார்ந்து பரந்தபொலி தோற்றம் — சார்ங்க தான்கார் மேனியிற்செந் தாதுக் கலைபோர்த் தியதேய்ப்பப், புஞ்ச வளைக்கைக் குடந்தையுமை பொன்னிப் புதுநீர் ஆடுகவே — பொற்பார் அருண்மங் களவல்லி பொன்னிப் புதுநீர் ஆடுகவே. (6)

மின்செய் மருங்குற் கமலைமுதல் விளங்கு மடவார் பலரும் தம் – மேனி நுரைமொய்த் துறவுரிஞல் விலக்கி நறுநீர் தோய்ந் தெழுந்து, மன்செய் நினக்கு மஞ்சள்முதல் வாசம் திமிர்ந்து பணியாற்ற – வந்தசூழ அவருடம்பில் வண்ணம் செறித்த திறம் மானத், தென்செய் நினது திருமேனிச் செறிபச் சொளிசார்ந் திடக்கண்டோர் – திகழும் சகம்நின் மயம்என்னச் செப்பல் தெரிந்தாம் என்றுவப்பப், பொன்செய் வளஞ்சால் குடந்தையுமை பொன்னிப் புதுநீர் ஆடுகவே – பொற்பார் அருண்மங் களவல்லி பொன்னிப் புதுநீர் ஆடுகவே. (7)

சாற்றும் நினது வரவுவந்து தடவுக் குறிஞ்சி மணிகநகம் – சந்தம் அகிலா திகள்பாப்பித் தளவப் புறவ நறுங்கனியும், வீற்று மலரும் எதிர்குவித்து வெய்ய பாலை எழுமுருங்கை – மென்பூம் பொரிகள் மிகஇறைத்து விரும்ப மருதத் திணைஎன்றும், சேற்று முளைத்த கோகநகத் தீபம்ஏற்றி இலாங்கலியின் – செழுங்காய்க் குடங்கள் பலநிறுவித் தெய்வப் புனலார்த் திடுமதனுல், போற்று வளஞ்சால் குடந்தையுமை பொன்னிப் புதுநீர் ஆடுகவே – பொற் பார் அருண்மங் களவல்லி பொன்னிப் புதுநீர் ஆடுகவே. (8)

வேறு.

எண்ணிய எண்ணிய படியடி யவர்பெற இனிதுதவும் தருவே – எப்பிற வியும்நல நின்தரி சனமுறின் என்னப் பொலி கொடியே, கண்ணிய மறைமுடி எனுமொரு கட்சி கலந்தமர் பைங்கிளியே – காட்சி விருப்பர் உளச்சுூ தத்தொளி காலப் பயில் குயிலே, தண்ணிய யோகியர் சிந்தைக் கமலத் தடமக லாவ னமே – சாற்றும் எழுத்துரு வாகிய பரையே சகலா கமமுதலே, புண்ணியம் நண்ணிய கன்னிப் பொன்னிப் புதுநீர் ஆடுகவே – புராதனர் பங்களை மங்களை பொன்னிப் புதுநீர் ஆடுகவே. (9)

காவல ரல்லது பச்சிலையேனும் காய்ந்துதிர் சருகேனும் – கையின் அகப்படும் ஒன்றுகொ டுன்பொற் கமலத் திருவடியிட், டாவல ராயுளம் நெக்குரு கிக்கனி அன்பினர் அயனுதி – அமரர்

கன் நறுமுறு தன்மைய ராகி அயர்ந்திட மேற்போக்கி, நாவலர் நன்கு புகழ்ந்திடும் இன்ப நலப்பெரி யவராக – நன்கருள் புரிவரை மயிலே குயிலே ஞானவரோதயமே, பூவலர் பாவலர் கன்னிப் பொன்னிப் புதுநீர் ஆடுகவே – புராதனர் பங்களை மங்களை பொன் னிப் புதுநீர் ஆடுகவே. (10)

ஒன்பதாவது நீராடற்பருவம் முற்றிற்று.

---

## 10. பொன்னூசற்பருவம்.

பாவுநா லயின்அறல் கவர்ந்தகரு முகில்மீப் படர்ந்துவெண் தாரைபொழியப் – பற்றியிரு பாலுமிரு வெண்டிரை எழுந்தப் பயோதரம் அளாவகாப்பண், விரவுமொரு வெள்ளோதி மத்தின் மேல் அக்கடல் விராயவரை நின்றேர்மயில் – மேவியாங் கொண் மா கதம்படுத் தியபுடவி மிசைசிறவு தூண்வயிரமேல், இரவுதரு நிலவிட் டக்கிடையின் முத்தவடம் இயைப் பொருத்திமாட்டும் – எறிசுடர்செய் வயிரக் கொழும்பலகை மேலிவர்ந் தெண்டிசையும் ஏத் தெடுப்பப், புரவுபுரி சோணு டளிக்கும்ஆர் அருள்முதல்வி பொன் னூசல் ஆடியருளே – பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத் தமிழ்த பொன்னூசல் ஆடியருளே. (1)

மாண்டசெர் தாமரை நடுப்பொலிவ தென்அம் மணக்கோக நகமலர்த்தம் – வண்பரிதி மண்டலம் நடுப்பொலிவ தென்னஅம் மண்டலத் தால்ஒளிபெறும், நீண்டஅழல் மண்டலம் நடுப்பொலிவ தென்னஒளி நிறைசெம் மணிப்பலகைமேல் – நிலவுற அமர்ந்திருள் குடித்தெழும் மணிக்குழை நிலாஞ்செவியில் ஊசலாட, வேண்ட அருள் கைவளை கலித்தாட முகமதியின் வெண்ணகை நிலாவாட நண் – மெல்லிடை துவண்டாட அகிலபுவ னமும்ஆட மிக்கவளம் மல்கு சேர்த்தி, பூண்டதிரு நீர்சா டளிக்கும்ஆர் அருள்முதல்வி பொன்னூசல் ஆடியருளே – பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்த பொன்னூசல் ஆடியருளே. (2)

பழிதப அறங்குடிகொள் நினதுசெங் கையமர் பசுங்கிளியை மானஒளிகூர் — பவழச் செழும்பலகை ஏறிஅயி ராணியும் பங்கயத் திருவும் இருபால், உழியுமிளிர் மணிவடம் தொட்டாட்டயோகியர் உளக்கமலம் மேயஅனமே — உண்மைவே தாந்தத் தலாவுமயி லேஎளி தருதபா ஞானவாழ்வே, வழிவழி நினக்கடிமை என்று துதி நன்றுபுரி மாட்சியர்க் கெய்ப்பில்வைப்பே — மங்களாம் பிகையே எனக்கனி மனத்தினுயர் வாணிதிரு ஊசல்பாடப், பொழிவளப் புனல்நா டளிக்குமார் அருள் முதல்வி பொன்னூசல் ஆடியருளே — பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூசல் ஆடியருளே. (3)

கொங்குமலர் நின்னடிக் கமலமலர் மிசைதூய்க் குலாவப் பணிந்தெழுந்து — கோலமிகு திருவுருக் கண்டுநெக் குருகிக் குடந் தமுற் றருகுநின்று, தங்குகரு மலமெனப் படுபலகை யுள்ளால் தகைப்புண் டதற்கியைதாத் — தளையுமிரு வினைஆய பாசம் தொ டர்ந்தெண் தபுத்தமா யாபுவனமாம், எங்குமுழி தாவலைத் திடஊ சல் ஆடுவ தியாங்கள்தீர்ந் துய்யும்வண்ணம் — இலகுமதி நடுஅமரும் ஒருமான் எனத்தாள எறிசுடர்ப் பலகைஏறிப், பொங்குபுனல் நன்னு டளிக்குமார் அருள்முதல்வி பொன்னூசல் ஆடியருளே — பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூசல் ஆடி யருளே. (4)

இருவரும் புணர்மாதர் இருவரும் திருமுகத் தேற்றபாகத்து நின்றும் — இலகுமற் றரமாதர் யாவரும் தத்தமக் கேற்றநிலை நின்றுமேத்த, ஒருவரும் இருங்கார் உடுத்தபொன் வரைச்சிகரம் உற்றிலகு பசுமஞ்ஞைபோல் — ஒளிர்இளம் சோலைநடு அம்பொன் மணிமேடைமேல் உற்றபொற் பலகைஏறி, வெருவரும் பெருவாளை தன்னிளஞ் சிறுமீன் வியப்புற்று நோக்கஈனு — மீன்கணம்வெருக் கொள்ள வெடிகொண்டு வான்நீர் விராய்த்துளைந் தாடிமீளும், பொ ருவரும் புனல்நா டளிக்குமார் அருள்முதல்வி பொன்னூசல் ஆடி யருளே — பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூ சல் ஆடியருளே. (5)

ஒல்லுமிரு நாடிவழி ஓடுமிரு காலால் உலாய்த்திரி மனத்தின் வழியே – ஓடியை யாறும் புகுந்துபுலன் ஐந்துநக ருற்றுழலல் அற்றமேலாச், சொல்லுமா னந்தத் தியாந்துளைந் தாடஒண் சுட் டோதி மம்தாமரைத் – தூயபா சடைஇவர்ந் தாங்குமுத் தணிபூண்டு சுடர்மா கதப்பலகைமேல், வெல்லும்ஆ தாவுற இவர்ந்தொளிர் பசுஞ்சாலி விறல்வேழம் மறையஉயரும் – வித்தகம் உணர்ந்துவிண் ணுறுசாலி மறையநனி வேழங்கள் ஒங்கிமலியப், புல்லும்வள நீர்நா டளிக்குமார் அருள்முதல்வி பொன்னூசல் ஆடியருளே – பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூசல் ஆடி யருளே. (6)

பத்தியெனும் மிகுசுவைப் பாவைப் பெருங்கடல் படிந்துவிளை யாடும் அனமே – பகரும்நிக மாகமா தீதஆ னந்தப் பராங்கடல் உதித்த அமுதே, தத்திவிழும் அருவிமலி வரையிற் பிறந்தொளி தவாதபிர ணவகுஞ்சரம் – தன்னைப் புணர்ந்தொரு மருப்பிளங் களிறீன்று தழைதரு நலத்த பிடியே, சித்தியமை யோகியர் உளக் கமலம் ஊறித்தெவிட்டாது பெருகுதேனே – தேவர்க்கும் மூவர்க் கும் யாவர்க்கும் மாறுத செல்வத் தமைந்தவாழ்வே, புத்தியமை நீர்நா டளிக்குமார் அருள்முதல்வி பொன்னூசல் ஆடியருளே – பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூசல் ஆடி யருளே. (7)

இகலரிய பத்திமை எனப்பகரும் அஞ்சனத் தெய்தவெளி யாம்நிதியமே–எற்றைக்கும் அகறல்சற் றிலையாக அவ்வலை யிடைப் படும் தெய்வமானே, நகலரிய தென்னுத வக்கோக நகமலருள் நா ளுமமர் சுட்டன்னமே – நன்றது விளைந்தமன மாகிய பெருந்தளி நயக்குறும் மணித்தீபமே, பகலரிய சந்தமும் காரகிலும் யானைப் பருங்கோடும் வெள்வயிரமும் – பாவுமா ணிக்கமும் வான்றியிரு கோட்டும் படுத்திரைத் தலவுபொன்னிப், புகலரிய நீர்நா டளிக்கு மார் அருள்முதல்வி பொன்னூசல் ஆடியருளே – பூக்கமழ் தடத்த குட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூசல் ஆடியருளே. (8)

எண்ணிய பெரும்புவனம் எங்கணும் விராய்ப் பொலியும் இயல் பின்றி யும்தேவர்சூழ் — இடைமருது முதல்ஐங் குரோசப் பெருந் நலம் எனப்பகரும் ஐந்தகத்தும், நண்ணிய பெரும்புகழ்ச் சோமே சம் விசுவேசம் நாகேசம் அபிமுகேசம் — நாடரிய கௌதமே சம் பாண புரம்என நவின்றெவரும் எத்துமீசம், அண்ணிய விரைப்பசிய மாலதிவ னேசம்என அவிர்இவை முதற்பல்தேத்தும் — ஆகிய விசே டத்தின் அமர்வாய் பெரும்புலவ ராலும்உரை செய்ய முடியாப், புண்ணியநல் நீர்நா டளிக்குமார் அருள்முதல்வி பொன்னூசல் ஆடி யருளே — பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூ சல் ஆடியருளே. (9)

திகழ்தரு மணிச்சிலம் பாதிபுனை பாதமும் செம்பட் டுடுத்த அரையும் — செய்யஅற முழுதும்வளர் அங்கையும் பரஞான தேசு மலி தருகொங்கையும், இகழ்தருதல் இல்லாத வேயையடு தோளும்அழ கியமங் கலக்கழுத்தும் — இண்டைமலர் வென்றதிரு முகமுமார் அருள்பொழியும் இணைவிழியும் உபமானமுற், றகழ் தருவில் நுதலும்என் புன்துதியும் எற்றுமகிழ் அம்செவியும் முகில் விளர்க்கும் — ஆரளக பாரமும் மிகப் பொலிய அண்டபகி ரண் டங்க ளும்தழைக்கப், புகழ்தருநல் நீர்நாடளிக்குமார் அருள் முதல்வி பொன்னூசல் ஆடியருளே — பூக்கமழ் தடத்தகுட மூக் கமிழ் திடத்தமிழ்து பொன்னூசல் ஆடியருளே. (10)

பத்தாவது பொன்னூசற் பருவம் முற்றிற்று.

---

ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

## இப்பதிப்பாசிரியர்,

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்

சித்தாந்தசைவமணி —

## ந. சு. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்

## பரிசோதித்துப் பதிப்பித்த வேறு நூல்கள்.

---

பூப்பிள்ளை அட்டவணை
சதமணிக்கோவையுரை
துகளறுபோதம் உரை
திருஞானசாகரம்
திருவுந்தியார் உரை
திருக்களிற்றுப்படியார் உரை
சிவஞானபோதம் பழையவுரை
இருபா இருபது உரை
சிவப்பிரகாசம் உரை
அந்வைதவாக்கியத் தெளிவுரை
திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் குறிப்புரை
அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்
திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம் உரை
வடதிருமுல்லைவாயிலந்தாதி பதவுரை
கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி குறிப்புரை
கயிலைபாதி காளத்திபாதி யந்தாதியுரை
தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம்
ஏகாம்பரநாதருலா முதலியன
பாரததாத்பரியசங்கிரகம்
விநாயகரகவல் பதவுரை
சந்தானசாரியர் புராணம் குறிப்புரை
சந்தானகுரவர் நான்மணிமாலை குறிப்புரை
திருமந்திர சிந்தனை
திருவெம்பாவை பதவுரை பொழிப்புரைகள்
திருவெம்பாவைக் கருத்து முதலியன
கந்தபுராணதத்துவம்
சிவபூசைத்திரட்டு
ஞானபூசை உரையுடன்
திருப்பருப்பதம் தேவாரத் திருப்பதிகம் பொழிப்புரை
திருக்கோகரணம் ,,
திருவஞ்சைக்களம் ,,
திருவாவடுதுறையாதீன வரலாறு
ஸ்ரீ அம்பலவாண தேசிகர் நினைவுமலர்
உலகுடையநாயனார் திருவிருத்தம் முதலியன
நமச்சிவாய மூர்த்தி தாராட்டு சோபனம் முதலியன
சைவப் பேரரசு
சமயம்
ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் பிரபந்தங்கள் I
தொட்டிக்கலை, ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் பிரபந்தங்கள் I
சகலகலாவல்லிமாலையுரை
சிவஞானக்களஞ்சியம் 1, 2 வெளியீடுகள்
தீப லட்சுமி ஸ்தோத்திரம்

---

ஸ்ரீ முருகன் அச்சகம், கும்பகோணம்.